# நமது தாய்நாடு

ஸ்ரீ விவேகானந்த சுவாமிகள்

அருளியது

Chidambaram

Presented by R.M. Chockalingam Chettiar Karaikudi.




ரா. கிருஷ்ணமூர்த்தி

மொழிபெயர்த்தது

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்,

சென்னை.

1929

 [விலை அணா எட்டு.

# முன்னுரை

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸதேவரின் திருவருள் மகிமையினால் ஜீவன் முக்தராகி, "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்னும் உயர் நோக்கங்கொண்டு உலக முழுவதும் பிரயாணம் செய்து வேதாந்த சமயத்தின் பெருமையை நிலைநாட்டியவர் சுவாமி விவேகானந்தர். பாரமார்த்திகப்பெருஞ் செல்வரான அப்பெரியார் தேசபக்தியிலும் தலைசிறந்து விளங்கினார் என்பதைத் தமிழ் நாட்டார் நன்கறிவர். பாரதநாட்டினிடம் நமது சுவாமிகள் அளப்பரும் அன்புகொண்டிருந்தார். நமது தாய்நாட்டின் தற்கால நிலையை எண்ணி எண்ணி அவர் கண்ணீர் உகுத்தார்.

எனவே, சுவாமிகள் கடவுள் நெறிபற்றி உய்யும் மார்க்கத்தை உலகிற்கெல்லாம் பொதுவாக எடுத்துரைத்திருப்பது போல், நமது தாய்த் திருநாட்டின் முன்னேற்றத்துக்கான யோசனைகளும் சிறப்பாகச் சொல்லி யருளி யிருக்கிறார். இன்றைய தினம் பாரதமக்களின் உள்ளத்தை அலைத்துவரும் ஒவ்வொரு விஷயத்தைப் பற்றியும் சுவாமிகள் பேசியோ, எழுதியோ உள்ளார். தேச முன்னேற்றத்துக்கு அவர் கூறியுள்ள யோசனைகள் எல்லாம் இன்றைக்கும், என்றைக்கும் பொருந்துவனவாகும். தீர்க்கதரிசனம் வாய்ந்த அவர் உபதேச மொழிகளைச் சிரமேற்கொண்டு நடந்தால், நம் தொல்லைகள் பலவும் நீங்கி விடுமென்பது நமது உறுதியான நம்பிக்கை.

சுவாமிகளின் உபந்நியாசங்கள், அவர் எழுதிய நூல்கள், கடிதங்கள் முதலியவை ஆங்கிலத்தில் ஏழு பெரிய புத்தகங்களாக வெளியிடப்பட்டிருக்கின்றன. அவற்றிலிருந்து, பாரத நாட்டின் முன்னேற்றத்தைக் குறித்து சுவாமிகள் அருளியுள்ள சிற்சில நல்லுரைகளைப் பொறுக்கித் தனித்தனி விஷயத் தலைப்புகளின் கீழ்த் திரட்டிச் சேர்த்து, கல்கத்தா இராமகிருஷ்ண மாணவர் இல்லத்தார் ஒரு புத்தகமாக வெளியிட்டார்கள். அதன் மொழி பெயர்ப்பே இச்சிறு நூலாகும்.

சுவாமிகளின் உபதேசங்கள் முழுமையும் இன்னும் தமிழில் வெளியாகாமையால், இச்சிறு புத்தகம் தமிழ் நாட்டுக்குப் பெரிதும் பயன்படுமென்று கருதி இதனை வெளியிடலானோம்.

மேலெழுந்த வாரியாகப் படிப்பவர்களுக்குச் சிற்சில பகுதிகளில் சுவாமிகளின் உரைகள் முன்னுக்குப் பின் முரண்படுவனபோல் ஒருகால் தோன்றக்கூடும். ஆனால் சற்று ஆழ்ந்து நோக்கின் சுவாமிகளின் கருத்து நன்கு வெளியாகும். இது ஒரு தனி நூலாக சுவாமிகளால் எழுதப்படவில்லை யென்பதையும், பற்பல இடங்களிலிருந்தும் உபதேசங்களைத் திரட்டிப் புத்தகமாக்கப்பட்ட தென்பதையும் வாசகர்கள் நினைவு கூர்தல் வேண்டும். [சில விடங்களில், உதாரணமாக மேலை நாடுகளில் பேசுங்கால், நமது சமூக ஏற்பாடுகளின் நல்ல அம்சங்களையும் அவற்றின் உயரிய நோக்கங்களையும் சுவாமிகள் வலியுறுத்துகிறார். பாரத நாட்டில் பேசும்போது, நாம் நம்முடைய குறைகளைக் களைந்து முன்னேற்றம் அடையவேண்டுமென்னும் கருணை காரணமாக, நம் குறைபாடுகளைப் பற்றியே சிறிது வலியுறுத்திக் கூறுகிறார். நமது வாழ்க்கையில் நாம் எத்தகைய சீர்திருத்தம் செய்யினும், பாரதநாட்டின் பண்டை நாகரிகத்துக்கு எவ்விதக் கேடும் சூழாத முறையில் நம் முன்னோர்களை வாழ்த்திக்கொண்டே செய்தல் வேண்டுமென்பது சுவாமிகளின் முக்கிய நோக்கமாகும்.)

இச் சிறு நூலைத் தமிழ்நாட்டார் நன்கு படித்து, இதிலடங்கிய சுவாமிகளின் உபதேசங்களைத் தங்கள் வாழ்க்கையில் இயன்றவரை கொணர முயலுவார்களென்று நம்புகிறோம்.

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்,
மயிலாப்பூர்.
சுவாமி யதீசுவரானந்தர்

---

# பொருளடக்கம்


விஷயம் பக்கம்

முதல் அத்தியாயம்

1. நமது தாய்நாடு—அதன் மகிமை ... 1
2. நமது தாய்நாடு—அதன் சிறப்பியல் ... 5
3. நமது தாய்நாடு—அதன் பெருநோக்கம் ... 9
4. நமது தாய்நாடு—அதன் வருங்காலம் ... 13

இரண்டாம் அத்தியாயம்

1. தேசத் தொண்டர் குறைபாடுகள் ... 16
2. தேசத் தொண்டர்க்கு வேண்டுவதென்ன ? ... 24

மூன்றும் அத்தியாயம்

1. தாயகத்தில் தொண்டு—உண்மைத் தொண்டர்களின் பயிற்சி ... 34
2. பாரமார்த்திக அடிப்படை ... 36
3. சமூக சீர்திருத்த முறை ... 44
4. கல்வி—எல்லா சமூகத் தீமைகளுக்கும் அருமருந்து ... 49
5. பாமரர் முன்னேற்றம் ... 55
6. பெண்மக்கள் முன்னேற்றம் ... 63
7. சாதிப் பிரச்னை ... 70
8. இந்திய நாகரிகம்—அதைப் பாதுகாத்து வளர்த்தல் ... 81

நான்காம் அத்தியாயம்

1. வெளிநாட்டில் ஊழியம் ... 87

# நமது தாய்நாடு

## முதல் அத்தியாயம்

## 1. நமது தாய்நாடு — அதன் மகிமை

இப் பூவுலகிலே எந்த தேசமேனும் புண்ணிய பூமி என்னும் பெயருக்கு உரிமை யுடையதானல் அது நமது பாரத நாடேயாகும். ஆன்மாக்கள் எல்லாம் கர்ம பலன் துய்ப்பதற்கு வந்து சேர வேண்டிய தேசமும், கடவுள் வழியில் செல்லும் ஒவ்வோர் ஆன்மாவும் கடைசியாக அடைதற்குரிய வீடும் நமது பாரத கண்டமேயாகும். மனித சமூகத்தின் பெருந்தன்மை, தயாளம், தூய்மை, சாந்தம் என்னும் குணங்கள் பரிபூரண மடைந்திருப்பதும், அகநோக்கிலும் பாரமார்த்திகத்திலும் தலை சிறந்ததுமான நாடு ஒன்று உண்டானல், அது நமது பாரத வர்ஷமேயாகும்.

***

உலகிலே உள்ள எந்தப் பெரு மலையையும்விட அதிக உறுதியுடன் நிலைத்து நிற்கும் தேசம் அதுவேயாம். அது அழியாத வலிமையுடையது. முடிவில்லாத வாழ்வுடையது. தோற்றம் ஒடுக்கமில்லாத ஆன்மாவைப் போல் அதுவும் அமரத்வம் பொருந்தியது. அத்தகைய தாய்நாட்டின் புதல்வர்கள் நாம்.

***

இப்புண்ணிய பூமியில் சமயமும் சாஸ்திரமும் தழைத்து வளர்ந்தன. மகாபுருஷர்களுக்குப் பிறப்

பளித்த தேசமும், தியாக பூமியும் நமது தாய்நாடே யாகும். பண்டைக் காலத்திலிருந்து இன்றுவரை மனித வாழ்க்கையின் மகோன்னதமான இலட்சியம் விளங்கி வந்திருப்பது இந்நாட்டிலே தான்.

***

சாஸ்திரம், ஆத்மவித்தை, சன்மார்க்கம், சாந்தம், இனிமை, அன்பு என்னும் இவற்றிற்குத் தாய்நாடு பாரத தேசமாகும். அவை இன்றளவும் இங்கே நிலை பெற்றிருக்கின்றன. இவ்வுலகில் எனக்குள்ள அநுபவத்தை ஆதாரமாகக் கொண்டு, மேற்கூறிய துறைகளில் இன்னமும் இந்தியாவே எல்லாத் தேசங்களிலும் முதன்மை பெற்றிருக்கிறதென்று நான் தைரியமாகக் கூறமுடியும்.

***

மற்ற நாடுகளிலே கோடிக் கணக்கான மக்களின் இதயங்களை உலகாயதம் என்னும் தீ எரித்து வருகின்றது. அத்தியை அணைப்பதற்கான ஜீவ நீர் இந்நாட்டிலே உண்டு.

***

நமது தாய் நாட்டிற்கு இவ்வுலகம் பட்டிருக்கும் கடன் மகத்தானதாகும். தேசந் தேசமாய் எடுத்துக் கொண்டு பார்த்தால், சாதுக்களான ஹிந்துக்களுக்கு இவ்வுலகம் கடமைப்பட்டிருப்பது போல் வேறெந்த ஜாதிக்கும் கடமைப்பட் டிருக்கவில்லையென்று சொல்லலாம்.

***

கண்ணுக்குப் புலனுகாமலும், சத்தம் செய்யாமலும் வானின்றிறங்கும் இன்பப் பனித் துளியானது அழகிற் சிறந்த ரோஜா மொட்டுக்களை மலரச்செய்

கின்றது. உலகின் அறிவு வளர்ச்சிக்கு இந்தியா செய்திருக்கும் உதவியும் இத்தகையதே யாகும்.

***

பல்வேறு சமயங்களின் ஆராய்ச்சியினால் நாம் தெரிந்து கொள்வதென்ன? உலகிலே நல்ல தர்ம சாஸ்திரமுடைய தேசமெதுவும் நம்மிடமிருந்து சிறிதேனும் கடன் வாங்காமலில்லை யென்பதே. ஆன்மா அழிவற்றது என்னும் கொள்கையுடைய சமயங்கள் எல்லாம், அக்கொள்கையை நேர் முகமாகவோ, மறை முகமாகவோ நம்மிடமிருந்தே பெற்றிருக்கின்றன.

***

இந்த தேசத்தில் முடிதாங்கிய பெரு மன்னர்கள் தங்கள் மூதாதைகள் வனங்களில் அரை நிர்வாணமாய் வாசம் செய்த ரிஷிகள் என்று சொல்லிக்கொள்வதில் பெருமை யடைந்தார்கள். வேறெந்த நாட்டிலேனும் அத்தகைய அரசர்கள் இருந்ததாக நீங்கள் கேள்விப்பட்டதுண்டா? ஏழை வழிப்போக்கர்களைக் கொள்ளை யடித்துக்கொண்டு பெரிய கோட்டைகளில் வசித்த கொள்ளைக்கார ஜமீன்தார்களின் வழித்தோன்றியவர்கள் தாங்களென்று (மேனாட்டார் போல) இந்நாட்டில் அரசர்கள் சொல்லிக்கொள்ள விரும்புவதில்லை.

***

“வாழ்க்கைப் போராட்டத்தில் பலசாலிகளே மிஞ்சுவார்கள்” என்னும் புதிய கொள்கையைப்பற்றி மேனாட்டார் அதிகம் பேசுகிறார்கள். உடல் பலமுடையவர்களே பிழைத்திருப்பதற் குரியவர்கள் என்று அவர்கள் கருதுகிறார்கள். இது உண்மையானால், பண்டைக்காலத்தில் மிக பலசாலிகளாய் வெற்றிக்

கொடி நாட்டி வாழ்ந்திருந்த தேசத்தார் எல்லாம் இன்று புகழுடன் நிலைத்திருக்கவேண்டும்; உடல்வலி வற்றவர்களும், வேறு ஒரு சாதியையோ, தேசத்தையோ என்றும் ஜெயித்தறியாதவர்களுமான ஹிந்துக்கள் முன்னமே மாண்டு மறைந்து போயிருக்க வேண்டும். ஆனால் நாம் முப்பது கோடிமக்கள் இன்று வாழ்ந்து கொண்டுதா னிருக்கிறோம்!

***

இவ்வுலகிலுள்ள பற்பல ஜாதியார்களுக்குள்ளே, பிறநாட்டின் மீது எப்போதும் படையெடுத்துச் செல்லாதவர்கள் நாம்தான். அக்காரணத்தினால் ஆண்டவன் ஆசிர்வாதம் நமக்கு எப்போதும் இருந்துவருகிறது. அவனுடைய அருள் வலிமையினாலேயே நாம் உயிர் வாழ்ந்து வருகிறோம்.

***

இவ்வுலகில் மிகப் பெருமை கொண்ட மனிதர்களுக்குள்ளே நானும் ஒருவன். ஆனால் உங்களுக்கு உண்மையைச் சொல்லி விடுகிறேன்; — அந்தப் பெருமை என் பொருட் டன்று; என் மூதாதைகளின் பொருட்டேயாம். .... பண்டை ஆரியர்களின் சந்ததிகளே! இறைவன் அருளால் நீங்களும் அத்தகைய பெருமை கொள்வீர்களாக. உங்கள் இரத்தத்திலும் உங்கள் மூதாதைகளிடத்து நம்பிக்கை ஊறிப் போகுமாக. அது உங்கள் வாழ்க்கையில் ஒன்றிக் கலந்து விடுவதாக. அதன் மூலமாய் உலகிற்கும் கதி மோக்ஷம் கிட்டுமாக.

***

ஆயிரம் ஆயிரம் வருஷங்களாய் இந்தியா அமைதியுடன் வாழ்ந்து வருகிறது. .... இங்கிருந்து உயர்ந்த

கருத்துக்கள் அலைமேல் அலையாகக் கிளம்பிப் பரவி வந்திருக்கின்றன. இங்கே பேசப்பட்ட ஒவ்வொரு வார்த்தையும் உலகிற்கு அருளையும் சாந்தத்தையும் நல்கியிருக்கின்றன.

***

விஸ்தாரமான இவ்வுலகத்தின் சரித்திரம் முழுவதையும் ஆராய்ச்சி செய்து பாருங்கள். உன்னதமான இலட்சியம் ஒன்றை நீங்கள் எங்கே கண்டாலும் அதற்குப் பிறப்பிடம் இந்தியாவா யிருப்பதைக் காண்பீர்கள். மிகப் புராதன காலந்தொட்டு பாரதநாடு மக்கட் குலத்துக்கு உயர்ந்த கருத்துக்க ளளிக்கும் ஓர் அருஞ் சுரங்கமாயிருந்து வந்திருக்கிறது. உன்னதமான இலட்சியங்களுக்குப் பிறப்பளித்து அவற்றை உலக முழுவதும் விஸ்தாரமாகப் பரப்பியும் வந்திருக்கிறது.

## 2. நமது தாய்நாடு — அதன் சிறப்பியல்

சங்கிதத்தில் ஒவ்வொரு கீர்த்தனத்துக்கும் முக்கியமான மத்திம சுரம் ஒன்றிருப்பது போல், ஒவ்வொரு நாட்டிற்கும் பிரதான வாழ்வு நோக்கம் ஒன்று உண்டு. மற்றவை யெல்லாம் அதற்கிரண்டாவது ஸ்தானத்தையே அடையும். இந்தியாவிற்கு அத்தகைய பிரதான வாழ்க்கைஇலட்சியம் சமயமாகும். சமூக சீர்திருத்தம் முதலிய மற்றவை யெல்லாம் இந்தியாவைப் பொறுத்தவரை இரண்டாந்தர விஷயங்களேயாம்.

***

சங்கிதத்தில், மத்திம சுரமாயுள்ள சுருதியை யொட்டி மற்ற சுர வரிசைக ளெல்லாம் மேலும் கீழும்

தவழ்ந்து இன்னிசை எழுப்புகின்றன. இவ்வாறே ஒவ்வொரு தனி மனிதனுக்கும், ஒவ்வொரு தேசத்துக்கும் வாழ்க்கையின் தனிப் பெரும் நோக்கம் ஒன்றுண்டு. மற்ற நோக்கங்களெல்லாம் இதைச் சுற்றி நின்று வாழ்க்கையை இனிமை பயக்கச் செய்கின்றன.

* * *

ஒரு நாட்டிற்கு அரசியல் வலிமையே ஜீவதாதுவாயிருக்கலாம். இங்கிலாந்து இத்தகைய நாடாகும். மற்றொரு நாட்டுக்குக் கலை உணர்ச்சியே உயிர் நாடியாயிருக்கலாம். இவ்வாறு பற்பல நாடுகளுக்கும் பற்பல துறைகள் முதன்மையான வாழ்வு நோக்கங்களாயிருக்கின்றன. இந்தியாவிலோ சமயத் துறையே வாழ்வின் பற்பல துறைகளுள்ளும் மகோன்னதம் பெற்று விளங்குகிறது. தேசிய வாழ்க்கையென்னும் சங்கீதத்துக்குச் சமயமே இங்கு சுருதியாக இயங்குகிறது. நூற்றுக்கணக்கான வருஷங்களாகத் தன் வாழ்க்கையின் முக்கியமான துறையாய் இருந்துவரும் தேசிய ஜீவதாதுவை எந்த நாடேனும் புறக்கணிக்க முற்பட்டு அதில் வெற்றியும் பெற்றால் அத்தேசம் அழிந்தே போகின்றது. ஆதலின் நீங்கள் சமயத்தை மட்டும் புறக்கணித்துவிட்டு, அரசியல், சமூக இயல் முதலியவற்றுள் எதனை உங்கள் நடு நோக்கமாய், தேசிய வாழ்க்கையின் உயிர் நாடியாய் வைத்துக் கொண்டாலும், அதன் முடிவு நீங்கள் அடியோடு அழிந்துவிடுதலேயாம்.

* * *

துறவும், தொண்டுமே இந்தியாவின் தேசிய இலட்சியங்களாகும். இந்த இலட்சியங்களை நீங்கள் பேணி வளர்த்தால் மற்றவை தமக்குத் தாமே வளரும். இந்

நாட்டில் பாரமார்த்திகக் கொடியை எவ்வளவுதான் உயர்த்தினுலும் அதிகம் என்று சொல்வதற்கில்லை. பாரமார்த்திகமே இந்தியாவின் கதி மோட்சமாகும்.

***

தேகத்தில் ஜீவரத்தம் தூயதாயும், வன்மை பெற்றும் இருந்தால் நோய்க்கிருமி எதுவும் உயிர்வாழ முடியாது. நமது சமூகத்தின் ஜீவரத்தம் பாரமார்த்திக வாழ்வேயாகும். அது தெளிந்து, பலத்துடன் ஓடினுல் மற்ற எல்லாம் சரியாயிருக்கும். அந்த இரத்தம் மட்டும் சுத்தமாயிருந்தால், அரசியல், சமூக இயல், பொருள்இயல் முதலியவற்றிலுள்ள குறைபாடுகள் எல்லாம் - நாட்டின் வறுமைகூட - நீங்கிவிடும்.

***

இந்தியாவின் உயிர் நாடி சமயம் ; சமயமொன்றே யாகும். சமயமென்னும் உயிர் நாடி அற்றுப் போகும் போது பாரதநாடு நிச்சயம் இறந்துவிடும். அரசியல் திருத்தங்களும், சமூக சீர்திருத்தங்களும் அப்போது அதைக் காப்பாற்ற மாட்டா. இந்தியாவின் புதல்வர் ஒவ்வொருவருடைய தலையிலும் குபேரனுடைய செல்வமெல்லாம் பொழிந்தபோதிலும், அதன் உயிரைக் காக்க முடியாது.

***

அரசியல், வியாபாரப் பெருக்கினுல் வரும் பெருமிதச் செல்வம், அதிகாரம், சரீர விடுதலை முதலியவைகளைப்பற்றி மற்றவர்கள் பேசட்டும். ஹிந்துக்களின் மனம் இவற்றை அறிந்து கொள்ளாது ; அறிந்து கொள்ள விரும்பவும் விரும்பாது.

பாரமார்த்திகம், சமயம், ஆண்டவன், ஆன்மா, ஆன்ம விடுதலை என்னும் இவைகளைப்பற்றிப் பேசுங்கள். மற்ற நாடுகளில் தத்துவசாஸ்திரிகள் என்று சொல்லப்படுவோரைவிட இந்தியாவிலுள்ள மிகத் தாழ்ந்த குடியானவன் இவ்விஷயங்களைப்பற்றி அதிகம் தெரிந்தவனா யிருப்பதைக் காண்பீர்கள்.

***

இந்தியர்களிடம் அரசியலைப்பற்றியும், சமூக புனருத்தாரணத்தைப் பற்றியும், பணஞ் சேர்த்தலைப் பற்றியும், வியாபார வளர்ச்சியைப் பற்றியும் நீங்கள் பேசுவன வெல்லாம் குள்ளவாத்தின் முதுகில் விழுந்த நீர்த்துளி போல் தெறித் தோடிப்போகும்.

***

அரசியல், சமூக முன்னேற்றங்கள் எல்லாம் அவசியமல்ல வென்று நான் சொல்லவில்லை. ஆனால் அவையெல்லாம் இந்நாட்டிற்கு இரண்டாந்தரமான முக்கியமே யுடையன வென்றும், சமயமே இங்குத் தலை சிறந்ததாகும் என்றும் நான் கூறுகிறேன். இதை நீங்கள் சிந்தையில் பதித்து வைக்கவேண்டும்.

***

கங்கை நதியானது உறைந்த பனிக்கட்டிகள் நிறைந்த தன் மூலஸ்தானத்திற்குத் திரும்பிச்சென்று அங்கிருந்து வேறொரு புதிய திக்கில் ஓடவேண்டு மென்று நீங்கள் விரும்புகிறீர்களா? அது ஒரு கால் சாத்தியமானாலும், இத்தேசம் தன் சிறப்பியலான சமய வாழ்க்கையைத் துறந்து, புதிய அரசியல் வாழ்க்கையையோ வேறொன்றையோ ஏற்றுக்கொள் ளுதல் இயலாத காரியம்.

எதிர்ப்பின் வலிமை எங்கே குறைவாயிருக் கிறதோ அவ்வழியின் மூலமாகவே உங்களால் வேலை செய்யமுடியும். இந்தியாவில் அவ்வாறு எதிர்ப்பு மிகக் குறைவாயிருக்கும் வழி சமய வழியேயாகும்.

* * *

இப்புராதன நாடு இன்னமும் உயிர் வாழ்கிற தென்றால், அதற்குக் காரணம், இன்னமும் அது ஆண்டவனையும், சமயம், பாரமார்த்திகம் என்னும் நிதிக்களஞ்சியங்களையும் விடாமற் பற்றிக் கொண் டிருப்பதேயாம்.

* * *

இந்தியாவை எவராலும் அழிக்க முடியாது; அது மரண பயமின்றி நிமிர்ந்து நிற்கின்றது. ஆன் மாவே அதன் பின்பலமாயிருக்கும் வரை, அதன் மக் கள் பாரமார்த்திக வாழ்வைக் கைவிடாதிருக்கும் வரை நமது தேசம் இங்ஙனமே நின்றொளிரா நிற்கும். இந்தியர்கள் பிச்சைக்காரர்களாகவே யிருக்கலாம்; என்றென்றைக்கும் வறுமையும், பட்டினியும், ஆபாச மும், அழுக்கும் சூழ்ந்தவர்களாய் வாழலாம். ஆனால் அவர்கள் தங்கள் இறைவனைக் கைவிட வேண்டாம். தாங்கள் முனிபுங்கவர்களின் வழித் தோன்றிய மக்கள் என்பதை மறக்க வேண்டாம்.

## 3. நமது தாய்நாடு — அதன் பெரு நோக்கம்

ஹிந்து சமூகத்தில் பிறக்கும் ஒவ்வொரு குழந் தையும் எக்கருமத்தைத் தன் வாழ்வின் பெரு நோக்க மாகக் கொண்டு பிறக்கின்றது தெரியுமா? பிராம்மண னுடைய பிறவி நோக்கம் "சமயச் செல்வத்தைப் பாதுகாத்தலே" என்று மனு பெருமையுடன் புகன்

திருப்பதை நீங்கள் படித்திருப்பீர்கள். ஆனால அது பிராம்மணனுடைய பிறவி நோக்கம் மட்டு மன்று என நான் சொல்வேன். இப்புண்ணிய பூமியில் ஜனிக்கும் ஆண் பெண் குழந்தை ஒவ்வொருவருக்கும் ஏற்பட்டுள்ள பிறவிப் பெரு நோக்கம் "சமயச் செல்வத்தைப் பாது காத்தலே" யாகும்.

***

பரிபூரண உயர் நாகரிகத்துக்காக உலகம் காத்துக் கொண்டிருக்கிறது. பாரத நாட்டின் நாகரிக பொக்கிஷத்தை, ஹிந்து ஜாதியின் அதி ஆச்சரியமான பரம்பரை ஞானச் செல்வத்தை உலகம் எதிர் நோக்கி நிற்கிறது.

***

இந்தப் பாரத நாட்டில் நமது மூதாதைகள் சேகரித்து வைத்திருக்கும் அமிர்தத்தில் ஒரு துளிக்காக ஏந்திய கைகளுடன் வெளியே கோடிக்கணக்கான மக்கள் நின்று கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய இதய வேதனையை நமது நாட்டின் சுவர்களுக்குள் அடைந்து கிடக்கும் நாம் சிறிதும் அறிந்துகொண்டோமில்லை.

***

மேனாடு முழுவதும் ஓர் எரி மலையின் உச்சியின் மீது நின்று வருகின்றது. அவ்வெரிமலை எந்த நிமிஷமும் தீயைக் கக்க ஆரம்பித்து அந்நாட்டைப் பாழாக்குதல் கூடும். மேனாட்டார் மனச்சாந்தி வேண்டி உலகின் ஒவ்வொரு மூலையிலும் தேடிவிட்டார்கள்; ஆனால் அதை எங்கும் அவர்கள் காணவில்லை. இவ்வுலக இன்பத்தைப் பரிபூரணமாய் அவர்கள் அநுபவித்தார்கள்; ஆனால் அது வெறும் பிரமையே எனக் கண்டார்

கள். பாரத நாட்டின் ஞான அருவி மேனாட்டில் வேகமாகப் பாயுமாறு வேலை செய்வதற்கு இதுவே தக்க தருணமாகும்.

***

பாரதத் தாயின் புதல்வர்களுக்கு தர்ம மார்க்கத்தில் ஒரு மகத்தான கடமை ஏற்பட்டிருக்கிறது. மனித வாழ்க்கையின் இலட்சியங்களையும் கடமைகளையும் பற்றி உலகிற்கு அறிவு புகட்டும் ஊழியம் புரிய அவர்கள் தங்களைத் தகுதியாக்கிக் கொள்ள வேண்டும்.

***

இந்நாட்டில் சமயமும், பாரமார்த்திகமுமே இன்னமும் ஜீவநீர் சுரக்கும் ஊற்றுக்களா யிருந்து வருகின்றன. இவ்வூற்றுக்களி லிருந்து சுரக்கும் நீர் பொங்கிப் பெருகி எங்கெங்கும் பாய்ந்தோடி உலகை மூழ்கடிக்க வேண்டும். அவ் வமுத வெள்ளம், அரசியல் ஆசைகளாலும், சமுதாய சூழ்ச்சிகளாலும் நசுக்கப்பட்டுத் தற்போது அரைப் பிராணனுடன் இருக்கும் மேனாடுகளுக்கும் பிற தேசங்களுக்கும் புத்துயிரையும், நவசக்தியையும் அளிக்க வல்லதாகும்.

***

மக்கட் குலத்தின் முன்னேற்றத்திற்கு ஹிந்துவின் சாந்தமுள்ள மூளையும் தன் பங்கு வேலையைச் செய்தே யாகவேண்டும். உலகிற்கு இந்தியா அளிக்கக் கூடிய நன்கொடை பாரமார்த்திக ஞான ஒளியே யாகும்.

***

உங்களில் ஒவ்வொருவரும் அரியதொரு பரம்பரைச் செல்வத்துடன் பிறந்திருக்கிறீர்கள். மகிமை

வாய்ந்த இத்தேசத்தின் மகத்தான பண்டை வாழ்வு அனைத்துமே அச்செல்வமாகும். உங்களுடைய மூதாதைகள் கோடிக் கணக்கானவர்கள் உங்களுடைய செயல் ஒவ்வொன்றையும் கவனித்து வருகிறார்கள். எனவே, எச்சரிக்கையுடன் ஒவ்வொன்றையும் எண்ணித் துணியுங்கள்.

***

ஒவ்வொரு ஜாதிக்கும் ஒரு சிறப்பியல்பு உண்டு. ஒவ்வொரு ஜாதிக்கும் தனிப்பட்ட வாழ்வு நோக்கம் ஒன்று உண்டு. அவ்வாறே ஒவ்வொரு ஜாதியும் இவ்வுலகில் செய்து முடித்தற்குரிய தனிப் பெருங் காரியம் ஒன்று உண்டு. ஒவ்வொரு ஜாதியும் தத்தமக்குரிய காரியத்தைச் செய்து அதன் பயனைக் காட்ட வேண்டும். அரசியல் பெருமையோ, இராணுவ வலிமையோ நமது ஜாதியின் வாழ்வு நோக்கமன்று. அவ்வாறு எப்போதுமிருந்ததில்லை; இனியும் இராது. நமது வாழ்க்கை இலட்சியம் முற்றும் வேறானதாகும். அது, நமது ஜாதியின் பாரமார்த்திக சக்தியை யெல்லாம் திரட்டிச் சேர்த்துப் பாதுகாத்தலே யாம். அவ்வாறு ஒன்று சேர்க்கப்பட்ட சக்தியானது, தக்க சமயம் நேரும்போது பெரு வெள்ளம் போல் பாய்ந்து உலக முழுவதையும் மூழ்கடிக்கும்.

***

இந்தியர்களாகிய நாம் எத்தனையோ துன்பங்களுக்கும் துயரங்களுக்கும் ஆளாகியும், வறுமைக் குழியில் வீழ்ந்து கிடந்தும், உள் நாட்டுக் கொடுமைகளுக்கும், வெளி நாட்டாரின் கொடுமைகளுக்கும் உள்ளாகியும், இன்னமும் உயிர் வாழ்ந்திருப்பதின் காரணம் யாது? நம்மிடம் தனிப்பட்ட தேசிய இலட்சியம்

ஒன்று இருப்பது தான். இந்த இலட்சியம் உலகப் பாதுகாப்பிற்கு இன்னும் அவசியமா யிருக்கிறது.

***

ஓராயிரம் ஆண்டுகளாக எத்தனையோ கஷ்டங்களுக்கும், குழப்பங்களுக்கும் உள்ளாகியும் ஹிந்து ஜாதி அழிந்துபடாம லிருப்பதேன்? நமது பழக்க வழக்கங்கள் அவ்வளவு பொல்லாதவையா யிருப்பின், இதற்குள்ளாக நாம் இருந்த விடந்தெரியாமல் மாண்டு மறைந்து போகாததேன்? நம்மீது படையெடுத்து வந்த அன்னியர்கள் பற்பலரும் நம்மை நசுக்கிப் போடுவதற்கு எல்லாவித முயற்சிகளும் செய்து பார்க்கவில்லையா? அவ்வாறாக, மற்றும் பல அநாகரிக ஜாதிகளுக்கு நேர்ந்த கதி ஹிந்துக்களுக்கு நேராத காரணம் என்ன?

***

உலக நாகரிக மென்னும் பொதுக் களஞ்சியத்திற்கு இந்தியா தன்னுடைய பகுதியை இனியும் தர வேண்டி யிருக்கிறபடியாலேயே அது இன்னமும் உயிர் வாழ்ந்து வருகிறதென்று அறிந்து கொள்ளுங்கள்.

## 4. நமது தாய்நாடு — அதன் வருங்காலம்

நீளிரவு கழிந்து விட்டதாகக் காண்கிறது; நமது கொடிய துன்பத்துக்கும் கடைசியில் முடிவு வந்து விட்டதாகத் தோன்றுகிறது; உயிரற்ற பிணம்போல் காணப்பட்ட உடலும் உயிர் தழைத் தெழுந்திருக்கக் காண்கிறோம். எங்கேயோ வெகு தூரத்திலிருந்து ஒரு குரல் வருவதைக் கேட்கிறோம். .... ஹிமாலயத்திலிருந்து வரும் இனிய குளிர் பூங்காற்றைப்

போல் அக்குரல் குற்றுயிராயிருந்த எலும்புகளுக்கும் நசைகளுக்கும் புத்துயிரைக்கொண்டு வருகின்றது. நமது மயக்கமும் அகன்று வருகிறது. பாரதத்தாய் தன் நீண்ட உறக்கத்தினின்றும் விழித்து எழுவதைக் காணுதவர் குருடர்களே யாவர்; அல்லது கண்ணிருந் தும் காணுதவர்களாவர்.

***

இனி நமது தாயின் முன்னே எவரும் எதிர்த்து நிற்க இயலாது; இனிமேல் அவள் என்றும் உறங்கப் போவதில்லை. புற உலக சக்திகள் எவையும் அவள் முன்னேற்றத்தை இனித் தடுக்கமுடியாது; அளவற்ற வலிவுடைய அத்தேவி விழித்தெழுந்து விட்டாள்.

***

பெரிய மாமொன்றில் அழகிய பழம் ஒன்று பழுத்துக் கனிகின்றது; அப்பழம் கீழே விழுந்து அழுகுகின்றது. அவ்வழுகிய கனியிலிருந்து தரையில் வேர் பாய்ந்து, அதினின்றும் முன்னதைவிடப் பெரிய விருக்ஷமொன்று தழைத்துக் கிளம்புவதைக் காண் கிறோம். இத்தகைய க்ஷீணதசையிலிருந்து நாம் தற் போது வெளி வந்திருக்கிறோம். அதுவும் அவசியமான ஒரு நிலையே யாகும். பாரதத்தாயின் வருங்கால உன்னதம் அந்த க்ஷீணதசையிலிருந்தே தோன்றப் போகின்றது. இதற்குள்ளாகவே முளை கிளம்பித் தளிர்களும் காணத் தொடங்கிவிட்டன. அம்முளை விரைவிலேயே ஒரு பெரிய மகாவிருக்ஷமாக வளர்ந்து காட்சியளிக்கும்.

***

வருங்காலத்தில் அதி ஆச்சரியமான, மகிமை வாய்ந்த இந்தியா தோன்றப் போகின்றது. இதற்கு

முன் எப்போதுமிருந்ததைவிட அது பெருமை பொருந்தி விளங்கும். பண்டைக்கால ரிஷிகளையும் விடப் பெரிய மகான்கள் தோன்றுவார்கள். உங்கள் மூதாதைகள், ஆவி உலகங்களில் தத்தம் இடங்களிலிருந்து, தங்கள் சந்ததிகள் இவ்வளவு மகோன்னதம் பொருந்தி விளங்குவதைக் கண்டு மகிழ்ச்சியும் பெருமையும் அடைவார்களென்பதில் சந்தேகமில்லை.

***

கண்விழித்தெழுந்திருங்கள்; நமது பாரதத் தாய் புத்திளமை பெற்று, முன்னெப்போதையும் விட அதிக மகிமையுடன் தன் நித்திய சிம்மாசனத்தில் வீற்றிருப்பதைக் கண்டு மகிழுங்கள்.

***

நம்புங்கள்; உறுதியாக நம்புங்கள். இந்தியா கண் விழித்து எழுந்திருக்க வேண்டுமென்று ஆண்டவன் கட்டளை பிறந்துவிட்டது.

***

எழுங்கள்; எழுங்கள். நீளிரவு கழிந்தது. பொழுது புலர்ந்தது. கடல் புரண்டுவருகிறது. அதன் உத்வேகத்தைத் தடுக்க எதனாலும் ஆகாது.

---

இரண்டாம் அத்தியாயம்

## 1. தேசத்தொண்டர்கள் — அவர்களுடைய குறைபாடுகள்

இந்தியாவில் இரண்டு சாபக்கேடுகள் உண்டு. அவற்றில் ஒன்று நமது பலவீனம்; இரண்டாவது நமது பகைமை, ஈரமற்ற இதயம்.

***

உபநிஷதங்களின் மகிமையைப் பற்றிப் பேசுகிறோம். மகரிஷிகளின் சந்ததிகள் நாம் என்று பெருமை பேசிக் கொள்கிறோம். ஆயினும் மற்றும் பல ஜாதியாருடன் ஒப்பிடும்போது நாம் பெரிதும் பலவீனர்களாயுள்ளோம். உடல் பலவீனமே முதன்மையானது. குறைந்தபட்சம் நமது துன்பங்களில் மூன்றில் ஒரு பங்குக்கு அதுவே காரணமாகும். நமது இளைஞர்கள் முதலில் பலம் பெறவேண்டும். சமய வளர்ச்சி பின்னர் தானே ஏற்படும். என் வாலிப நண்பர்களே! நீங்கள் பலசாலிகளாகுங்கள். உங்களுக்கு என் புத்திமதி அதுவேயாகும். உங்களுக்கு, கீதையை விட விளையாட்டு சுவர்க்கத்துக்குச் சுருக்கு வழியாகும். உங்கள் தசை நார்களும், புஜங்களும் இன்னும் சிறிது வலிவு பெறுங்கால் கீதையை இன்னும் நன்றாய் அறிந்து கொள்வீர்கள். உங்கள் நரம்புக் குழாய்களில் இன்னும் சிறிது வலிவுள்ள இரத்தம் ஓடும்போது, கிருஷ்ண பரமாத்மாவின் மகத்தான ஞானத்தையும் மகத்தான பலத்தையும் இன்னும் நன்றாய் அறிந்து கொள்ளக் கூடும். உங்கள் முதுகு வளையாமல் உங்

கள் கால்கள் தளர்வுறுமல் நீங்கள் நிமிர்ந்து நிற்கும் போது, "நாம் ஆண்மக்கள்" என்னும் உணர்ச்சி உங்களுக்கு ஏற்படும்போது, உபநிஷதங்களின் நுட்பத்தையும், ஆன்மாவின் மகிமையையும் நன்குணர்ந்து கொள்வீர்கள்.

***

நாம் வேண்டுவதென்ன? இரத்தத்தில் பலம், நரம்புகளில் வலிவு, இரும்புபோன்ற தசைநார்கள், எஃகை யொத்த நரம்புகள்—இவையே நமக்கு வேண்டும். தளர்ச்சி தரும் கசிவுள்ள கொள்கைகள் நமக்குத் தேவையில்லை.

***

இந்தியாவில் தற்போதுள்ள பெரும் பாவம் நமது அடிமைத் தனமே யாகும். ஒவ்வொருவரும் கட்டளை யிடவே விரும்புகிறுர்; கீழ்ப்படிவதற்கு எவரும் தயாராயில்லை. பண்டைக் காலத்து அதி ஆச்சரியமான பிரம்மசரிய முறை மறைந்ததே இந் நிலைமைக்குக் காரணம்.

***

முதலில் கீழ்ப்படியக் கற்றுக்கொள்; கட்டளை யிடும் பதவி தானே வரும். முதலில் வேலைக்காரனு யிருந்து பழகு; எஜமானனுக நீ தகுதி பெறுவாய்.

***

உனக்கு மேலுள்ளவன் நதியில் குதித்து முதலை யைப் பிடிக்கும்படி கட்டளையிட்டால் முதலில் அதன் படி செய். பிழைத்து வந்தால் அவனுடன் வாதாடு. உத்திரவு தவறுயிருந்த போதிலும் முதலில் நிறை வேற்றிவிட்டுப் பின்னர் அதை மறுத்துக் கூறு.

பொறாமையை யொழியுங்கள்; இன்னும் செய்ய வேண்டி யிருக்கும் பெரிய வேலைகளை யெல்லாம் செய் யும் ஆற்றல் பெறுவீர்கள்.

***

அடிமைகள் எல்லாருக்கும் பெரிய சனியனாயிருப் பது பொறாமையே யாகும். நமது நாட்டைப் பிடித்த சனியனும் அதுதான். எப்போதும் பொறாமையை விலக்குங்கள்.

***

நமது நாட்டாரில் ஒருவர் முன்னேறிப் பெருமை யடைய முயன்றால் நாம் எல்லாரும் அவரைக் கீழே இறுத்தவே முயல்கிறோம். ஆனால் வெளி நாட்டான் ஒருவன் வந்து நம்மை உதைக்கும்போது பேசாம லிருக்கிறோம்.

***

நாம் முதலில் ஆராதிக்க வேண்டிய தெய்வங்கள் நமது தேசமக்களே யாவர். ஒருவரிடம் ஒருவர் பொறாமை கொண்டு, ஒருவரோடொருவர் சண்டை யிடுவதற்குப் பதிலாக ஒருவரையொருவர் நாம் பூசிப் போமாக.

***

நாம் நம்பிக்கை யிழந்துவிட்டோம். நான் சொன் னால் நம்புவீர்களா? இங்கிலீஷ்காரனை விட நமக்கு நம்பிக்கை குறைவு. ஆயிரம் மடங்கு குறைவு!

***

முப்பத்து மூன்று கோடி ஜனங்களாகிய நாம் சென்ற ஆயிரம் ஆண்டுகளாக, நம்மை மிதித்துக் கொண்டுவரும் எந்த அன்னியக் கூட்டத்தாராலும்,

அவர்கள் எவ்வளவு சிறு தொகையினரா யிருப்பினும், ஆளப்பட்டு வருவதேன்? ஏனெனில், அவர்களுக்குத் தங்களிடம் நம்பிக்கை இருந்தது ; நமக்கு அது இல்லை. உங்களிடம் நீங்கள் நம்பிக்கை கொள்ளுங்கள். அந்த நம்பிக்கையின்மேல் வலிமையுடன் நில்லுங்கள். அதுவே நாம் வேண்டுவதாகும்.

***

நமக்கு சிரத்தை வேண்டும் ; தன்னம்பிக்கை வேண்டும். பலமே உயிர் ; பலவீனமே மரணம். நாம் மரணமற்ற, சுதந்திரமுள்ள, தூய்மையே இயல்பாகக் கொண்ட ஆத்மா அல்லோமா? நாம் பாவம் எவ்வாறு செய்யமுடியும்? முடியவே முடியாது. இத்தகைய நம்பிக்கை வேண்டும். இந்நம்பிக்கை நம்மை மனிதர் களாக்கும் ; தேவர்களாக்கும். நாம் சிரத்தையை இழந்து விட்டபடியால்தான் இந்நாடு நாசமடைந் திருக்கிறது.

***

நாம் பல விஷயங்களைப் பற்றி எண்ணுகிறோம். ஆனால் அவற்றைச் செய்வதில்லை. நாம் கிளிப்பிள்ளை கள் ஆய்விட்டோம். பேசுதலே நமது வழக்கமாய்ப் போய்விட்டது. செயலில் ஒன்றும் நடத்துவதில்லை. இத்தகைய வலிமையற்ற மூளையினால் எதுவும் செய்ய முடியாது. அதற்கு வலிவு கொடுக்க வேண்டும்.

***

நீங்கள் அறிந்தது அதிகம் ; ஆனால் செய்வது குறைவு. உங்கள் அறிவு அளவு கடந்து போய்விட்டது. அதுதான் உங்களுடைய தொல்லை. உங்கள் இரத்தம் வெறும் தண்ணீர் போன்றது. ஆகையினால்தான் உங்கள் மூளை தோல் உரிந்து வருகிறது ; உங்கள்

உடம்பு சோர்ந்து கிடக்கிறது. உங்கள் உடம்பை மாற்றிப் புதுப்பித்துக் கொள்ள வேண்டும்.

***

பேச்சு! பேச்சு! பேச்சு! பேச்சு அளவு கடந்து விட்டது. நாம் பெரிய சாதியாராம்! உளறல்! நாம் மனோபலமும், உடல் வலிவும் அற்ற சோகைகள்; உண்மை இதுதான்.

***

நமது தேசிய இரத்தத்தில் ஒரு பயங்கரமான நோய் ஊர்ந்து கொண்டிருக்கிறது. அதுதான் எதையும் பரிகசிக்கும் தன்மை; சிரத்தை யில்லாமை. இந்நோயைத் தொலைத்து விடுங்கள். சிரத்தையுடைய பலசாலிகளா யிருங்கள். மற்றவையெல்லாம் தாமே வரும்.

***

நமது சமயம் சமையலறைக்குள் புகுந்து விடக் கூடிய அபாயம் நேர்ந்திருக்கிறது. நாம் வேதாந்திகளு மல்லோம்; பௌராணிகர்களு மல்லோம்; தாந்திரிகர்களு மல்லோம். நாம் "தொடாதே" சமயிகள். சமையலறையே நமது சமயம். சோற்றுப் பானையே நமது கடவுள். "என்னைத் தொடாதே. நான் பரிசுத்தன்" என்பதே நமது சமயக் கொள்கை. இன்னும் ஒரு நூற்றாண்டு காலம் இவ்வழியே சென்றோமானால் நம்மில் ஒவ்வொருவரும் பைத்தியக்காரர் விடுதியையே அடைவோம்.

***

என் மகனே! எந்த மனிதனாதல், தேசமாதல் பிறரைப் பகைத்து உயிர்வாழ முடியாது. என்றைய தினம் இந்நாட்டில் 'மிலேச்சன்' என்னும் வார்த்தை

யைச் சிருஷ்டித்தார்களோ, என்றைய தினம் பிறருடன் கலந்து பழகுவதை நிறுத்தினார்களோ அன்றே இந்தியாவுக்குச் சனியன் பிடிக்கலாயிற்று.

***

மற்றொரு படிப்பினையை நாம் நினைவுகூரவேண்டும். பிறர் செய்வதுபோல் செய்தல் நாகரிகம் ஆகாது. நான் இராஜாவின் உடைதரித்துக் கொள்ளலாம். அதனால் நான் இராஜாவாய்விடுவேனா? சிங்கத்தோல் போர்த்துக்கொண்ட கழுதை சிங்கமாகி விடுமா? பிறரைப்போல் வேஷந் தரித்தல் பெரிய கோழைத்தனம். அதனால் அபிவிருத்தி எதுவும் ஏற்படாது. உண்மையில் அது மனிதனுடைய பயங்கரமான இழிநிலைக்கு அறிகுறியாகும். ஒருவன் தன்னைத்தானே இழிவாக நினைக்க ஆரம்பித்துவிட்டால், தன் முன்னோர்களைப் பற்றி வெட்கப்பட ஆரம்பித்துவிட்டால் அவனுடைய அழிவு காலம் நெருங்கிவிட்டதென்பது உறுதியாகும். இந்தியவாழ்வு முறையிலிருந்து அகன்று விடாதீர்கள். இந்தியர் அனைவரும் வேறோர் அன்னிய ஜாதியாரைப்போல் உண்டு, உடுத்து, நடக்கத் தொடங்கினால் இந்தியா நன்மையடையும் என்று ஒரு கணமும் நினைக்க வேண்டாம்.

***

நாம் சோம்பேறிகள்; நம்மால் வேலை செய்ய முடியாது; நம்மால் ஒன்றுசேர முடியாது; நாம் ஒருவரை யொருவர் நேசிப்பதில்லை; ஆழ்ந்த சுயநல உணர்ச்சி உள்ளவர்கள் நாம்; நம்மில் மூன்று பேர் சேர்ந்து ஒருவரை யொருவர் துவேஷியாமல் எதுவும் செய்யமுடியாது.

நமது இயற்கையில் நிர்மாணத்திறன் என்பது பூஜ்யமாயிருக்கிறது. இந்தத் திறன் பெற வேண்டும். அது பெறும் இரகசியம் பொறுமையைத் தொலைத் தலையாகும். உங்கள் சகோதரர்களின் அபிப்பிரா யத்துக் கிணங்க எப்போதும் சித்தமாயிருங்கள். எப்போதும் சமாசப்படுத்தவே முயலுங்கள்.

***

நமது நிலைமை என்ன? கட்டுப்பாடு சிறிதுமில் லாத ஜனத்திரள்; சுயநலம் மிகக் கொண்டவர்கள்; நெற்றியில் குறியை இந்தப் புறமாய்ப் போடுவதா, அந்தப் புறமாய்ப் போடுவதா என்பது குறித்து நூற் றுக்கணக்கான வருஷங்களாய்ச் சண்டை போடுகிற வர்கள்; சாப்பிடும்போது பிறர் பார்த்தால் உணவு தீட்டாய்ப் போய்விடுகிறதா இல்லையா என்பது போன்ற விஷயங்களைப்பற்றிப் புத்தகம் புத்தகமாய் எழுதுகிறவர்கள்.—இத்தகைய மக்கள் நாம்.

***

ஆதலின் வருங்காலத்தில் பாரதநாடு பெருமை பெற்று விளங்க வேண்டுமானல் நிர்மாணத்திறன், சக்தி சேகரம், மன ஒற்றுமை இவை வேண்டும். ....சமூக வாழ்வின் இரகசியம் ஒருமனப்படுதலே யாகும்.....சிதறிக்கிடக்கும் மனே சக்திகளை ஓரிடத் தில் சேர்த்து ஒருமுகப்படுத்திப் பிரயோகித் தலே வெற்றியின் இரகசியம். சீனன் ஒவ்வொரு வனும் தன் தன் வழியே சிந்திக்கிருன். ஆனல் மிகச் சிறு தொகையினரான ஜப்பானியர் எல்லாரும் ஒரு வழியாய் எண்ணுகிருர்கள். இவ்விரண்டின் பயன்களும் நீங்கள் அறிந்தவையே யாகும்.

குழந்தையைப் போல் எதற்கும் பிறரை நம்பி யிருப்பது நமது தேசிய இயற்கையாய்ப் போய்விட்டது. உணவு வாயில் கொண்டுவந்து போடப்பட்டால் விழுங்க எல்லாரும் தயாராயிருக்கிறார்கள். சிலர் அதையும் தொண்டைக்குள் தள்ளவேண்டு மென்கிறார்கள். உங்கள் காரியத்தை நீங்களே செய்துகொள்ள முடியா விடின் நீங்கள் உயிர் வாழத் தகுதி யற்றவர்களாவீர்கள்.

***

ஒவ்வொரு தேசமும் தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ளவேண்டும். ஒவ்வொரு மனிதனும் தன்னைத் தானே ரட்சித்துக் கொள்ளவேண்டும். பிறர் உதவியை எதிர்பார்த்தல் ஆகாது. இதை எப்போதும் நினைவில் வையுங்கள்.

***

அயல் நாட்டு உதவியை நீங்கள் நம்பியிருக்கக் கூடாது. தனி மனிதர்களைப் போலவே தேசங்களும் தங்களுக்குத் தாங்களே உதவி செய்துகொள்ள வேண்டும். இதுவே உண்மையான தேசபக்தி. ஒரு தேசம் இது செய்யக் கூடவில்லையானால், அதன் முன்னேற்றத்துக்கு இன்னும் காலம் வரவில்லை யென்று அறிந்து கொள்ளுங்கள். அது காத்திருக்கவே வேண்டும்.

***

தொழிலில் ஒழுங்கு முறையைப் பொறுத்தவரை ஹிந்துக்கள் அசட்டை அதிகம் உடையவர்களாயிருக்கிறார்கள். கணக்கு வைத்தல் முதலியவைகளில் அவர்கள் திட்டமாயும், கண்டிப்பாயும் இருப்பதில்லை. இந்தியாவில் ஒற்றுமைப்பட்ட முயற்சிகள் எல்லாம்

இந்த ஒரு பெருங் குற்றத்தின் காரணமாகவே அழிந்து விடுகின்றன. தொழிலில் ஒழுங்கு முறை அநுசரிப்பது குறித்து நாம் இதுகாறும் கவனம் செலுத்தியதே யில்லை.

***

தொழில் முறைமையில் கண்டிப்பு வேண்டும். அதில் சிநேகத்துக்கும் சங்கோசத்துக்கும் இடமிருத்தல் கூடாது. ஒருவன் தன் வசமுள்ள ஒவ்வொரு நிதிக்கும் மிகத் தெளிவாகக் கணக்கு வைத்திருக்க வேண்டும். ஒன்றுக்கு உத்தேசிக்கப்பட்ட பணத்தை-ஒருவன் பட்டினி கிடக்கவே நேர்ந்தாலும் - வேறொன்றுக்கு உபயோகிக்கக் கூடாது. இது தான் தொழில் நேர்மை. அடுத்தாற்போல், தளராத ஊக்கம் தேவை. நீங்கள் எக்காரியம் செய்தாலும், அந்த நேரத்திற்கு அதுவே இறைவன் பணி ஆகிவிட வேண்டும்.

## 2. தேசத்தொண்டர்கள்—அவர்களுக்கு வேண்டுவதென்ன ?

இதயத்தினின்று எழும் உணர்ச்சி வேண்டும். வெறும் அறிவினால் என்ன பயன் விளையும்? அறிவு சில அடி தூரம் சென்று நின்று விடும். இதயத்தின் மூலமாகவே இறைவன் அருள் சுரக்கின்றான். ....ஆதலின், சீர்திருத்தக்காரர்களே! தேச பக்தர்களே ! உங்கள் இதயத்தில் உணர்ச்சி கொள்ளுங்கள்.

***

நீங்கள் உண்மையான உணர்ச்சி கொண்டிருக்கிறீர்களா? தேவர்கள், முனிவர்கள் இவர்களின் சந்ததி

களான லட்சோப லட்சம் மக்கள் இன்று மிருகங்களி னின்றும் அதிக வேற்றுமை யில்லாமல் வாழ்கிறார்க ளென்பதை உணர்கிறீர்களா ? லட்சக் கணக்கான மக் கள் இன்றைய தினம் பட்டினி கிடக்கிறார்க ளென்பதை யும், லட்சக்கணக்கானவர்கள் பல்லாண்டுகளாகப் பட் டினி கிடந்து வருகிறார்களென்பதையும் உணர்கிறீர் களா ? அறியாமை என்னும் கருமேகம் இந்நாட்டைக் கவிந்திருக்கிற தென்பதை உணர்கிறீர்களா ? அவ் வுணர்ச்சி உங்கள் மன அமைதியைக் குலைத்து உங்க ளுக்குத் தூக்கமில்லாமல் செய்து விடுகிறதா ? அது உங்கள் குருதியில் கலந்து, நரம்புக் குழாய்களில் ஓடி, இதய அடிப்புகளுடன் சேர்ந்து அடிக்கின்றதா ? ஏறக்குறைய அவ்வுணர்ச்சி உங்களைப் பைத்தியமே யாக்கிவிட்டதா ? இந்தப் பெரிய துன்பம் ஒன்றே உங் கள் மனதை முற்றும் கவர்ந்து விட்டதா? இதனால் உங் கள் பெயர், புகழ், மனைவி, மக்கள், உடைமை இவை அனைத்தையும், உங்கள் உடலையுங்கூட மறந்துவிட்டீர் களா ? தேசபக்தனாவதற்கு முதற்படி இதுவே யாகும்.

***

அன்பு, வெற்றி யளித்தல் நிச்சயம். உங்கள் சகோதரரிடத்து உங்களுக்கு அன்பு உண்டா ? கடவு ளைத் தேட நீங்கள் எங்கே செல்கிறீர்கள் ? ஏழைகள், துன்பப்படுபவர்கள், பலவீனர்க ளெல்லாரும் கட வுளர் அல்லரா ? அவர்களை ஏன் நீங்கள் முதலில் ஆராதிக்கக் கூடாது ? கங்கைக் கரையில் கிணறு தோண்டுவதேன் ? அன்பின் அளவற்ற சக்தியில் நம்பிக்கை வையுங்கள். பெயர், புகழ் முதலியவை இங்கு யாருக்கு வேண்டும்? பத்திரிகைகள் என்ன

சொல்கின்றன வென்று நான் கவனிப்பதே யில்லை. உங்களிடம் அன்பு இருக்கிறதா? இருந்தால் உங்களால் ஆகாதது ஒன்றுமில்லை. நீங்கள் சுய நலம் அறவே துறந்தவர்களா? அங்ஙனமாயின் உங்களை எதிர்த்து நிற்கக்கூடிய சக்தி யாதொன்றுமில்லை. எங்கும் ஒழுக்கமே பிரதானமானது. எத்தகைய பெரும் அபாயத்திலும் இறைவன் உங்களைக் காத்தருள் புரிவானென்று நம்புங்கள். உங்கள் தாய்நாட்டுக்கு வீரர்கள் தேவை; வீரர்களா யிருங்கள்.

***

குறுகலான பொந்துகளிலிருந்து வெளி வாருங்கள். உங்களைச் சுற்றிலும் நன்கு நோக்குங்கள். தேசங்கள் எப்படி முன்னேறுகின்றனவென்று பாருங்கள். உங்களுக்கு மனிதர்களிடம் அன்புண்டா? உங்கள் நாட்டினிடம் அன்புண்டா? அப்படியானால் வருக; இன்னும் பெரிய, சிறந்த இலட்சியங்களுக்காகப் போராடுவோம். பின்னால் திரும்பிப் பார்க்க வேண்டாம்; உங்களுக்கு உயிரினும் அருமையானவர்கள் புலம்பி அழும் சத்தம் கேட்கினும் திரும்பிப் பார்க்கவேண்டாம். முன்னேறிச் செல்லுங்கள்.

***

என் மகனே! அன்புக்கு எப்போதும் தோல்வி கிடையாது. இன்றோ, நாளையோ, பல யுகங்களுக்குப் பிறகோ சத்தியம் ஜெயமடைதல் நிச்சயம். அன்பே வெற்றி கொள்ளும். உங்கள் சகோதரர்களிடம் உங்களுக்கு அன்புண்டா?

நம்பிக்கை, அநுதாபம்! தீவிர நம்பிக்கை, அதி தீவிர அநுதாபம்! இவை இருப்பின் உயிரும், மரண மும், பசியும், குளிரும் ஒன்றுமில்லை யாகும்.

***

எப்போதும் தன்னம்பிக்கையை வளருங்கள். தீரச் சிறுவர்களே! நீங்களனைவரும் அரும்பெருங் காரியங்களைச் செய்யப் பிறந்தவர்களென்று நம்புங் கள்.

***

"உலகில் மற்ற எல்லாரும் தத்தமக்குரிய வேலை யைச் செய்து விட்டனர். உலகைப் பரிபூரணமாக்கப் பாக்கியிருக்கும் வேலை நான் செய்யவேண்டியதே" என்று நம்மில் ஒவ்வொருவரும் நம்பவேண்டும். அத் தகைய பொறுப்பை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

***

என் மகனே! உறுதியாக நில். பிறர் உதவியை எதிர் பாராதே. வேறு மனிதர்களின் உதவியைக் காட்டிலும் ஆண்டவனுடைய உதவி எவ்வளவோ பெரியதல்லவா? பரிசுத்தனுயிரு. பகவானை நம்பு. அவரை நம்பியுள்ளவரை நீ நேர் வழியில் செல்கிறுய். உன்னை எதுவும் எதிர்த்து நிற்க முடியாது.

***

பரஞ்சோதியின் ஒளியை வேண்டிப் பிரார்த்திப் போமாக. காரிருளிலே ஓர் ஒளிக்கிரணம் தோன்றும். பகவான் நமது கையைப் பிடித்து வழிகாட்டி அழைத் துச் செல்வார்.

ஆண்டவன் மகிமையே மகிமை. அவரே நமது படைத்தலைவர். எனவே, முன்னேறுங்கள். யார் விழுகிறார்கள் என்று திரும்பிப் பார்க்கவேண்டாம். மேலே நடவுங்கள். இவ்வாறே நாம் சென்று கொண்டிருப்போம். ஒருவன் விழுந்தால் மற்றொருவன் அவ் வேலையை ஏற்றுக் கொள்வான்.

***

சகோதரர்களே! நாம் ஏழைகள்; திக்கற்றவர்கள். ஆனால் இவ்வுலகில் பரமாத்மாவின் கருவிகளாக அமைந்தவர்கள் எல்லாரும் நம் போன்ற ஏழைகளாகவே யிருந்துள்ளார்கள்.

***

தீரர்களே! வேலைசெய்து கொண்டே போங்கள்; விட்டுவிடாதீர்கள். 'முடியாது' என்ற பேச்சு வேண்டாம். வேலை செய்யுங்கள்; இறைவன் அவ்வேலைக்குத் துணையா யிருப்பான். உங்களிடம் மகாசக்தி கோயில் கொண்டிருப்பதை உணருங்கள்.

***

குழந்தாய்! நான் வேண்டுவதென்ன தெரியுமா? இரும்பினை யொத்த தசை நார்கள்; எஃகினை யொத்த நரம்புகள்; இவற்றினுள்ளே இடியேறு போன்ற வலிவுள்ள மனம் - இவையே எனக்கு வேண்டும். பலம், ஆண்மை, க்ஷத்திரிய வீரியத்துடன் கூடிய பிரம்ம தேஜஸ் - இவை வேண்டும்.

***

பயம் என்பதையே யறியாத இரும்பினாலான உள்ளமும் இதயமும் தேவை.

உண்மையில் நீங்கள் என் குழந்தைகளானால் யாதொன்றுக்கும் அஞ்சமாட்டீர்கள் ; எதைக் கண்டும் தயங்கி நிற்கமாட்டீர்கள். சிங்க ஏறுகளை யொத்திருப்பீர்கள். இந்தியாவை மட்டுமென்று, உலகமுழுவதையும் நாம் எழுப்பியாகவேண்டும்.

***

துறவே முக்கியம். துறவு இன்றி எவனும் பிறருடைய தொண்டில் தன் இதய முழுவதையும் ஈடுபடுத்த முடியாது. சந்நியாசி எல்லாரையும் சமநோக்குடன் பார்க்கிறான். அனைவருக்கும் தொண்டு செய்வதற்கே தன்னைச் சமர்ப்பிக்கிறான்.

*** விதியமைவென்ன?

சத்தியம், அன்பு, உண்மை உள்ளம் இவற்றை எதுவும் எதிர்த்து நிற்கமுடியாது. நீங்கள் உண்மையாளர்களா? உயிரே போகுங் காலத்திலும் சுய நலத்தை மறந்தவர்களா? உங்களிடம் அன்பு உண்டா? அங்ஙனமெனில் அஞ்சவேண்டாம். நமனுக்கும் பயப்படவேண்டாம்.

***

மனிதர்கள், மனிதர்களே வேண்டும். மற்ற எல்லாம் தாமே வந்துசேரும். பலம், வீரியம், நம்பிக்கை, மாசற்ற உண்மை - இவையுடைய இளைஞர்கள் தேவை. இத்தகையர் நூறு பேர் இருந்தால் உலகத்தில் ஒரு பெரும் புரட்சியை உண்டுபண்ணி விடலாம்.

***

வேஷதாரியாகாமல், கோழையா யிராமல் ஒவ்வொருவரையும் மகிழ்விக்க முயல்க. தூய்மையுடனும் உறுதியுடனும் உன் கொள்கைகளைக் கடைப்

பிடித்து நட. தற்போது உன் வழியில் எவ்வளவு தடைகள் இருப்பினும், நாளடைவில் உலகம் உனக்குச் செவி கொடுத்தே தீரவேண்டும்.

***

கீழ்ப்படியும் நற்குணத்தைப் பயில். ஆனால் உன்னுடைய சொந்த நம்பிக்கையை மட்டும் கைவிடாதே. தலைவர்களுக்குக் கீழ்ப்படிதல் இல்லாத வரையில் சக்திகளை ஒன்று திரட்டுதல் சாத்தியமில்லை. தனி மனிதர்களின் சக்திகளை ஒன்று சேர்க்காத வரையில் எந்தப் பெரிய காரியமும் செய்ய இயலாது.

***

நம்பிக்கையுடனும் பலத்துடனும் உறுதியாக நில். உண்மை, கண்யம், தூய்மை இவற்றைக் கைக்கொள்.

***

மக்களுக்குத் தொண்டு செய்யும் பாதையில் நீ முன்னேறி வருங்கால் அதனுடன் சமமாக ஆத்ம சாதன மார்க்கத்திலும் முன்னேறி வருவாய்.

***

வேலை செய்யத் தொடங்கு; மகத்தான சக்தி தானே வருவதைக் காண்பாய். "என்னால் வகிக்க இயலாது" என்று நீ நினைக்குமளவுக்கு ஏராளமான சக்தி உன்னை வந்தடையும். பிறருக்காகச் செய்யும் அற்பமான ஊழியமும் உள்ளிருக்கும் சக்தியை எழுப்பவல்லது. பரநலத்தைப் பற்றிச் சிறிதளவு நினைத்து வருதலும் இதயத்துக்கு நாளடைவில் பெருவலிமை தருகின்றது. உங்கள் எல்லாரையும்

நான் உயிருக்குயிராக நேசிக்கிறேன். ஆயினும் நீங்க ளனைவரும் பிறருடைய தொண்டில் உயிர்விட வேண்டுமென்பதே என் மனோ ரதமாகும். அவ் வாறு நீங்கள் உயிர் நீத்தால் அதைக் கண்டு நான் மகிழ்ச்சியே யடைவேன்.

***

ஒவ்வொருவரிடத்தும் பொறுமையைக் கைக் கொள். .... ஆட்சி செலுத்த விரும்பாதே. எவன் சிறந்த ஊழியம் செய்யவல்லவனோ அவனே அரசரில் சிறந்தவனாவான்.

***

விவாதங்களில் நீ என் தலையிட்டுக்கொள்ள வேண்டும்? பலர் பல அபிப்பிராயங்கள் கூறலாம். அவற்றைப் பொறுமையுடன் கேட்டுக்கொள். பொறு மை, தூய்மை, விடாமுயற்சி இவையே கடைசியில் வெற்றி பெறும்.

***

மரணம் வரையில் நான் இடைவிடாது வேலை செய்வேன். மரணத்திற்குப் பின்னரும் உலக நன் மைக்காக உழைப்பேன். சத்தியமும் நன்மையும் அசத்தியத்தையும் தீமையையும்விட எவ்வளவோ மடங்கு சக்தி வாய்ந்தவை. அவை உன்னிடம் இருந்தால், முன்னேற்றம் நிச்சயம்.

***

உங்களுக்கு விருப்பமிருந்தால் என்னைப் பின் தொடர்ந்து வாருங்கள். ஆனால் அதற்கு அத்தியந்த உண்மை உள்ளமும், பரிபூரண சுயநலத் தியாகமும், எல்லாவற்றிற்கும் மேலாகத் தூய்மையும் வேண்டும்.

மகனே! பொறுமை கொள். நீ என்றும் எதிர் பார்த்ததைவிட அதிகமாய் உன் முயற்சி செழித் தோங்கும். ஒவ்வொரு காரியமும் ஜெயம் பெறுவ தற்கு முன் நூற்றுக் கணக்கான கஷ்டங்களைக் கடந்தே யாகவேண்டும். முயற்சி யுடையவர்கள், இன்றில்லா விட்டால் நாளை நிச்சயமாக ஒளி காண் பார்கள்.

***

அளவற்ற பொறுமை, அளவில்லாத் தூய்மை, முடிவில்லா முயற்சி இவையே நல்ல காரியங்களில் வெற்றி பெறும் இரகசியங்களாம்.

***

சோம்பல் ஒழியுங்கள்; இகபர சுகாநுபவங் களைத் தள்ளுங்கள். ஜனங்களை இறைவன் பாதத் தில் கொண்டு சேர்ப்பதற்காகத் தீயினில் குதியுங்கள்.

***

உங்கள் சகோதரர்களுக்குத் தலைமை வகிக்க முயலற்க; அவர்களுக்கு ஊழியமே செய்க. தலைமை வகிக்கும் பைத்தியமானது வாழ்க்கை யென்னும் கட லில் எத்தனையோ பெரிய கப்பல்களை யெல்லாம் மூழ் கடித்து விட்டது. மரணம் நேரினும் சுயநலம் கருத வேண்டாம். தொண்டினை மறக்கவேண்டாம்.

***

பிறருக்கு வழிகாட்டவாதல், பிறரை அடக்கி யாளவாதல் எப்போதும் முயலவேண்டாம். அனை வருக்கும் ஊழியராயிருங்கள். எல்லாவற்றினும் முக் கியமானது இதுவாகும்.

அதிகார ஆசை, பொறாமை — இவ்விரண்டினிடமும் மிக ஜாக்கிரதையா யிருத்தல் வேண்டும்..... "தலைவன் நான்" என்று சொல்லிக் கொண்டு முன் வந்தால் யாரும் உங்களுக்கு உதவி செய்யமாட்டார்கள். வெற்றிபெற விரும்பினுல் முதலில் "நான்" என்னும் உணர்ச்சியைக் கொன்றுவிடுங்கள்.

* * *

முதலிலேயே பெரிய திட்டங்களைப் போட்டுக் கொண்டு கிளம்பவேண்டாம். நிதானமாக ஆரம்பியுங்கள் ; மேன்மேலும் நிதானமாக முன்னேறுங்கள்.

* * *

எனது தீரச் சிறுவர்களே ! உத்தமப் புதல்வர்களே ! செயல், செயல் புரியத் தொடங்குங்கள். உங்கள் தோள்களைக் கொடுத்து (தேச முன்னேற்றமென்னும்) தேரின் சக்கரத்தைக் கிளப்புங்கள். பெயர், புகழ் முதலிய மடமைகளுக்காக நின்று திரும்பிப் பார்க்கவேண்டாம்.

* * *

உங்கள் இதயங்களையும், மனோரதங்களையும் இவ்வுலகினைப்போல் விசாலமாக்கிக் கொள்ளுங்கள்..... மதவெறியனின் உறுதி, உலகாயதனின் விசாலப் பார்வை — இவை இரண்டும் நமக்கு வேண்டும். நீராழியின் ஆழமும் எல்லையற்ற ஆகாயத்தின் விஸ்தாரமும் உடைய இதயம் வேண்டும்.

* * *

எப்போதும் ஆக்க முறையையே கடைப்பிடி. பிறரைக் குறைகூற வேண்டாம். நீ சொல்ல வேண்டியதைச்சொல். நீ போதிக்க வேண்டியதைப் போதி. அவ்வளவுடன் நின்றுவிடு. பிற எல்லாம் ஆண்டவன் திருவுளம்.

---

மூன்றும் அத்தியாயம்

# தாயகத்தில் தொண்டு

---

## 1. உண்மைத் தொண்டர்களின் பயிற்சி

ஆன்மத் தூய்மையினின் றெழும் தீவிர உற்சாகங் கொண்டவர்கள்; இறைவனிடம் அழியா நம்பிக்கையை அரணுகப் பெற்றவர்கள்; ஏழைகளிடமும், தாழ்ந்தவர்களிடமும், ஒடுக்கப் பட்டவர்களிடமும் கொண்ட அநுதாபத்தினுல் சிங்கத்தை யொத்த தைரியமடைந்தவர்கள்; இப்படிப்பட்ட ஸ்திரீ புருஷர்கள் நூறுயிரம் பேர் வேண்டும். இவர்கள் மோட்சம், பரோபகாரம், தாழ்ந்தோரின் முன்னேற்றம், சமூக சமத்வம் என்னும் சுவிசேஷங்களைப் பிரசாரம் செய்து கொண்டு இந்நாட்டின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைவரை ஆட்சி செலுத்துவார்கள்.

***

தங்களுடைய தெனக்கூடிய எல்லாவற்றையும் தேசத்திற்காகத் தியாகம் செய்யச் சித்தமா யிருப்பவர்கள்; உள்ளும் புறமும் உண்மை வடிவானவர்கள்;— இத்தகைய மனிதர்கள் தோன்றும்போது இந்தியா ஒவ்வொரு துறையிலும் பெருமை பெறும்.

***

சமூக, அரசியல் ஏற்பாடுகள் எல்லாவற்றிற்கும் அடிப்படை மனிதனுடைய குணதிசயமே யாகும். ஒரு சமுதாயம் குணத்திற் சிறந்து பெருமை பெறுவது அத்தேசத்தின் பார்லிமெண்டு இயற்றும் சட்டங்

களைப் பொறுத்ததன்று; அச்சமுதாயத்தைச் சேர்ந்த மக்கள் நல்லவர்களாய், பெருமை வாய்ந்தவர்களா யிருப்பதையே பொறுத்ததாகும்.

***

என்னைத் தொடர்ந்து வருவோர் மரணம் நேரினும் உண்மை பிறழாதவர்களா யிருக்கவேண்டும். அத்தகையவர்களே எனக்குத் தேவை. ஜெயாபஜெயங்களைப் பற்றி எனக்குக் கவலையில்லை....இயக்கம் தூய்மையா யிருக்கவேண்டும். இன்றேல் இயக்கமே வேண்டாம்.

***

இவ் வுலகிலுள்ள செல்வ மனைத்தையும்விட மனிதர்களே அரிய தன மாவார்கள்.

***

ஓ பாக்கியசாலியே! இத்தேசத்தின் மக்களை எவனுவது ஒருவன் தன் இதய பூர்வமாக நேசிப்பானுயின் பாரத நாடு மீண்டும் விழித்தெழுமென்று நான் நம்புகிறேன். அம்மக்கள் எத்தகையவர்கள் ? லக்ஷ்மி கடாட்சம் அற்றவர்கள் ; அதிர்ஷ்டவீனர்கள் ; விவேகம் அறவே இழந்தவர்கள் ; மிதித்து ஒடுக்கப்பட்டவர்கள் ; நித்திய பட்டினிக்காரர்கள் ; சண்டை யிடுபவர்கள் ; அசூயை யுடையவர்கள் ; வறுமை, அறியாமை என்னும் படு சுழலில் அகப்பட்டு நாளுக்கு நாள் அமிழ்ந்து வருபவர்கள். கோடிக் கணக்கான இத்தகைய தேச மக்களுக்காக, இந்நாட்டிலே பிறந்த விசால இதயம் படைத்த ஸ்திரீ புருஷர்கள் நூற்றுக் கணக்கானவர் தங்கள் சுகபோக ஆசைகளை யெல்லாம்

மறந்து பாடு படுவதற்கு எப்போது முன் வருகிறார்களோ அப்போதுதான் பாரதத்தாய் கண் விழிப்பள்.

***

இந்தியப் பாமர ஜனங்களைக் கைதூக்கி விடுதல் என்னும் இந்த ஒரே இலட்சியத்திற்காக இதயத்தையும், ஆன்மாவையும் ஈடுபடுத்தி உழைக்கக்கூடிய இளைஞர்களிடையே வேலை செய்யுங்கள். அவர்களைத் தட்டி எழுப்புங்கள். அவர்களுக்குத் துறவு நெறியில் பற்று உண்டாக்குங்கள். அவ்வேலை இளம் இந்தியர்களையே முழுதும் பொறுத்திருக்கிறது.

***

என்னுடைய வேலைத்திட்டம் இதுவாகும்: இளைஞர்களுக்குப் பயிற்சியளிக்கும் ஸ்தாபனங்களை இந்தியாவில் ஏற்படுத்தல்; அவர்களைக்கொண்டு உள் நாட்டிலும், வெளி நாட்டிலும் நமது சமய நூல்களிலுள்ள உண்மைப் பொருள்களை எடுத்துரைக்கச் செய்தல்.

***

மத்திய கலாசாலையொன்று ஏற்படுத்தி அதில் இளைஞர்களைப் பயில்விக்க வேண்டும். இப்படிப் பயிற்சிபெற்ற பிரசாரகர்களின் மூலமாய் ஏழைகளின் வீட்டு வாயிலுக்குக் கல்வியையும், சமயத்தையும் கொண்டு போக வேண்டும். பாமரர்களைக் கைதூக்கி விடுவதற்கான இந்த யோசனையை எங்கும் பரப்புங்கள்.

## 2. பாரமார்த்திக அடிப்படை

நாம் கவனம் செலுத்தற்குரிய முதலாவது வேலை இதுவாகும்: நமது உபநிஷதங்களிலும், சாஸ்

திரங்களிலும் புராணங்களிலும் உள்ள அதிஆச்சரிய மான உண்மைகளை அந்நூல்களிலிருந்து வெளிக் கொண்டு வந்து நாடெங்கும் விஸ்தாரமாகப் பரப்புதல் வேண்டும்.

***

இந்தியாவில் அபிவிருத்தி எதுவும் ஏற்பட வேண்டுமானல் முதலில் சமய எழுச்சி உண்டாக வேண்டும். ஆதலின் சமுதாய, அரசியல் கருத்துக் களைப் பரப்புவதற்கு முன்னுல் நாட்டைப் பாரமார்த் திக வெள்ளத்தில் மூழ்குவியுங்கள்.

***

தர்ம பூமியாம் இந்நாட்டில் ஆத்ம வித்யாதானம் என்னும் முதன்மையான அறத்தை நாம் மேற் கொள்வோமாக. ஆனல் அப் பேரறத்தை இந்தியா வின் எல்லைகளுக்குள் கட்டுப்படுத்திவிடல் கூடாது.

***

சமூகப் புரட்சிக்காரர்கள் எல்லாரும் (அல்லது அவர்களுடைய தலைவர்களேனும்) தங்களுடைய சம தர்மக் கொள்கைகளுக்கெல்லாம் பாரமார்த்திக அடிப் படை ஒன்றைத் தேடிக்கொண்டிருக்கிறார்கள். அத் தகைய அடிப்படை வேதாந்தமேயாகும்.

***

பலாத்காரமோ, அரசாங்க அதிகாரமோ, கடுமையான சட்டங்களோ சமூக நிலைமையை மாற்ற முடியாது. சமூகத் தீமைகளை நீக்கக்கூடியது பார மார்த்திகப் பயிற்சி ஒன்றேயாகும்.

***

எனக்கு அரசியலில் நம்பிக்கை கிடையாது. கட வுளும் சத்தியமுமே இவ்வுலகில் உண்மை அரசியல் ஆகும். மற்றவை யெல்லாம் வெறுங் குப்பை.

இந்தியாவில் நாம் எந்த அரசியல் ஏற்பாடுகள் வேண்டுமென்று போராடிக்கொண் டிருக்கிறோமோ அவை ஐரோப்பாவில் எத்தனையோ ஆண்டுகளாக இருந்து வந்திருக்கின்றன. மேனாட்டார் பல நூற்றாண்டு காலம் சோதனை செய்து அவை பயனற்றவை என்னும் முடிவுக்கு வந்திருக்கிறார்கள். அரசியல் ஆட்சி சம்பந்தமான ஸ்தாபனங்கள், ஏற்பாடுகள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாய் உபயோகமற்றவை என்று தள்ளப்பட் டிருக்கின்றன. ஐரோப்பா அமைதி இழந்து எப்பக்கம் திரும்புவதென்று தெரியாமல் தவிக்கின்றது.....மனித சமூகத்தை வாள் முனையினால் ஆளுதல் சிறிதும் பயனற்றதாகும். "பலாத்காரத்தினால் அரசாங்கம்" என்னும் கொள்கை எந்த இடத்திலிருந்து தோன்றிற்றோ, அதே இடந்தான் முதலில் இழிவுற்றுத் தாழ்வடைந்து தூகள் தூகளாய்ப் போகிறதென்பதை நீங்கள் காணலாம். ஜடசக்திக்குத் தோற்ற மளித்த ஐரோப்பாவானது, தனது அடிப்படையை மாற்றிக் கொள்ளாவிடில், தன் வாழ்விற்குப் பாரமார்த்திகத்தை ஆதாரமாகக் கொள்ளாவிடில், ஐம்பது ஆண்டுகளுக்குள் அது மண்ணோடு மண்ணாவது நிச்சயம்.

* * *

ஜனங்களால் நடத்தப்படும் புதிய ஆட்சிமுறை ஒன்று தோன்றி வருகிறதென்பதற்கு அறிகுறிகள் ஏராளமாய்க் காணக் கிடக்கின்றன. அவ்வாட்சிமுறையைச் சமுதாய ஆட்சி என்றாலும், வேறு எப்பெயரிட்டழைத்தாலும் கவலையில்லை. தங்கள் வாழ்க்கைத் தேவைகள் பூர்த்தி செய்யப்பட வேண்டுமென்று ஜனங்கள் கேட்கப்போவது நிச்சயம். வேலை குறைய

வேண்டுமென்றும், கொடுமையும் யுத்தமும் ஒழிய வேண்டுமென்றும், வயிறு நிறைய உணவு வேண்டு மென்றும் ஜனங்கள் வலியுறுத்துவார்கள். ஆகவே, தற்கால நாகரிகமோ, வேறெந்த நாகரிகமோ, சமயத் தையும் மக்களின் நற்குணத்தையும் அடிப்படையாகக் கொண்டாலன்றி நிலைத்து நிற்குமென்பது என்ன நிச்சயம்? சமயமே வாழ்வின் மூல வேர் என்பதை நம்புங்கள். அது சரியா யிருந்தால் எல்லாம் சரியா யிருக்கும்.

***

மனிதர்களைப் பார்லிமெண்டின் சட்டத்தினால் தர்மாத்மாக்களாகச் செய்ய முடியாதென்பது உங் களுக்குத் தெரியும்.....ஆகையினால்தான் அரசியலைவிட மதம் முக்கியமானதென்று சொல்கிறேன். மதம் வாழ்க்கையின் வேர்; சன்மார்க்கத் தத்துவங்களுடன் அடிப்படையான சம்பந்தமுடையது.

***

சட்டம், அரசாங்கம், அரசியல் ஆகியவை முடி வான நிலைகளல்ல என்பதை அனைவரும் ஒப்புக் கொண்டே யாக வேண்டும். மக்களின் உண்மை நலம் அவைகளுக்கப்பால் இருக்கிறது. அங்கே சட்டம் தேவையே யில்லை.

***

வாழ்வின் அடிப்படை சட்டம் அன்று எனக் கிறிஸ்து நாதர் கண்டிருந்தார். சன்மார்க்கமும் தூய்மையுமே வாழ்விற்குப் பல மளிப்பவை யென்று அவர் உணர்ந்திருந்தார்.

இங்கிலாந்து செய்யக் கூடியதெல்லாம் என்ன? இந்தியா தன் கதி மோட்சத்தைத் தானே தேடிக் கொள்வதற்கு உதவி செய்யக்கூடும். அவ்வளவுதான். இந்தியாவின் குரல்வளையில் கை வைத்துக்கொண்டிருக்கும் அன்னியர் வார்த்தையைக் கேட்டு நடப்பதனுல் ஏற்படும் அபிவிருத்தி எதுவும் பயனளியாதென்பது என் கருத்து. மிக உயரிய வேலையாயினும், அடிமைத் தொழிலாளியினுல் செய்யப்படுங் காலத்து அது இழிவுறுகிறது.

***

தேவைகள் உங்களுக்கா, அல்லது உங்களை ஆள்வோருக்கா என்று சொல்லுங்கள். உங்களுக்கானல், அவைகளை யார் பூர்த்தி செய்ய வேண்டும்? அவர்களா? நீங்களேயா? பிச்சைக்காரனின் தேவைகள் எப்போதும் பூர்த்தி செய்யப்படுவதில்லை. உங்களுக்கு வேண்டுவனவெல்லாம் அரசாங்கம் கொடுத்து விடுவதாக வைத்துக் கொள்வோம். அவற்றை வைத்து நிர்வகிக்க மனிதர்கள் எங்கே? எனவே முதலில் மனிதர்களைத் தயார் செய்யுங்கள். மனிதர்கள் நமக்கு வேண்டும். சிரத்தை யில்லாவிட்டால் மனிதர்கள் எங்கிருந்து வருவார்கள்?

***

முதலில் பாரமார்த்திக அறிவைப் பரப்புங்கள். அதனுடன் லௌகிக அறிவும், மற்ற எல்லா அறிவும் தாமே வரும். ஆனல் சமய சம்பந்தமில்லாத லௌகிக அறிவைப் பெற முயன்றீர்களாயின், இந்தியாவைப் பொறுத்தவரை, உங்கள் முயற்சி வீணேயாகும். ஜனங்களிடம் அதற்குச் செல்வாக்கு எப்

போதும் உண்டாகாது. இதைத் தெளிவாய் உணருங்கள்.

***

வருங்கால இந்தியாவை நிர்மாணிப்பதில் முதல் காரியம் சமய ஒற்றுமையேயாகும். யுக யுகாந்தரமாக நின்று நிலவிவரும் பாரத தேசம் என்னும் பாறையில் செதுக்கி அமைக்கவேண்டிய முதற்படி இதுவேயாம். "ஹிந்துக்களாகிய நமக்குச் சில பொது இலட்சியங்கள் உண்டு. நமது நன்மையையும், நமது ஜாதியின் நன்மையையும் முன்னிட்டு நமது அற்பச் சண்டைகளையும் சிறு வித்தியாசங்களையும் விட்டுவிட வேண்டும்" என்னும் இப்பாடம் நம்மெல்லாருக்குமே கற்பிக்கப்படல் அவசியம்.

***

சிதறிக் கிடக்கும் பாரமார்த்திக சக்திகளை ஒன்று திரட்டுதலே இந்நாட்டில் தேசீய ஒற்றுமை முயற்சியாம். பாரமார்த்திகம் என்னும் கீதத்திற்கு எவரெவருடைய இதயங்கள் ஒத்துத் தாளம் போடுகின்றனவோ அத்தகையவர்கள் சேர்ந்த சமூகமே இந்திய சமூகமாகும்.

***

உலக மனைத்தும் உண்மையில் ஒன்றே என்னும் உயர் இலட்சியத்தை அநுஷ்டானத்தில் கொண்டு வராமல் இந்தப் பாரத நாட்டை எவரும் புனருத்தாரணம் செய்ய முடியாது.

***

இரும்புபோன்ற தசை நார்கள், எஃகினை யொத்த நரம்புகள், எதனுலும் தடுக்கமுடியாத மனோ வலிமை ஆகிய இவையே நமது தேசத்திற்குத் தற்போது

வேண்டியவை. இந்த புவனத்தின் இரகசியங்களை யெல்லாம் ஆழ்ந்து அறியக் கூடிய மனோவலிமை; ஆழாழியின் அடித்தலத்துக்குப் போக வேண்டியிருந்தாலும், காலனை நேருக்கு நேர் சந்திக்க வேண்டி வந்தாலும் எடுத்த காரியத்தை எவ்வாறேனும் முடிக்கும் அஞ்சா நெஞ்சம்; இவை நமக்கு வேண்டும். எல்லாம் ஒன்றே என்னும் அத்வைத இலட்சியத்தை அறிந்து சாதனத்தில் கொணரும் போதுதான் அத்தகைய மனோவலிமையை நாம் உண்டு பண்ணவும், நிலைபெறச் செய்யவும் இயலும்.

* * *

உபநிஷதங்களின் மகத்தான உண்மைகள் உங்கள் முன்னால் இருக்கின்றன. அவற்றை உணருங்கள். அவற்றிற்கிணங்க வாழ்வு நடத்துங்கள். அப்போது இந்தியாவின் கதி மோட்சம் தானே கிட்டிவிடும்.

* * *

நமக்கு வேண்டுவது வலிமை, வலிமையே என்று உங்களுக்குச் சொல்கிறேன். அவ் வலிமையின் பெருஞ் சுரங்கம் உபநிஷதங்களாகும். உலகமுழுவதிற்கும் நவசக்தி ஊட்டுவதற்குப் போதிய வலிமை உபநிஷதங்களில் இருக்கிறது. அவற்றின் மூலமாய் உலகத்துக்கே புத்துயிரும், புதிய ஊக்கமும் தரலாம். எல்லாத் தேசங்களையும், சமூகங்களையும், மதங்களையும் சேர்ந்தவர்களுக்குள்ளே பலவீனர்கள், துன்புற்றவர்கள், கொடுமைக் காளானவர்கள் ஆகிய அனைவரையும் தத்தம் பலங்கொண்டு நின்று விடுதலை பெறும்படி உபநிஷதங்கள் சங்கநாதம் செய்து அழைக்கின்றன. சரீர விடுதலை, மனோ விடுதலை, ஆன்ம விடுதலை எனும் இவையே உபநிஷதங்கள் உபதேசிக்கும் மூல மந்திரங்களாகும்.

உபநிஷதங்களிலிருந்து வெடிகுண்டைப் போல் கிளம்பி அஞ்ஞான இருட்பாறைகளைத் தகர்க்கும் மந்திரம் ஒன்று உண்டு. அது நிர்ப்பயம்-அஞ்சாமை என்பதே. அஞ்சாமை மதம் ஒன்றே தற்போது கற்பிக்கப்பட வேண்டிய மதம்.

***

எழுங்கள்! கண் விழியுங்கள்! பலவீனம் என்னும் இந்த மாய வசியத்தினின்றும் விடுபடுங்கள். உண்மையில் எவனும் பலவீன னல்லன். ஆன்மா எல்லையற்றது; சர்வசக்தி வாய்ந்தது; சர்வமும் அறிந்தது. எழுந்து நில்லுங்கள். "என்னுளே ஆண்டவன் உளன்" என்று அறைகூவுங்கள். தமோகுணமும், பலவீனமும், மனோபிரமையும் மிகுந்து நமது ஜாதியை அழுத்தி வருகின்றன. ஓ, ஹிந்துக்களே! அந்த பிரமையினின்று விடுதலை பெறுங்கள்.

***

உங்களுடைய உண்மை இயற்கையை உணருங்கள். மற்றவர்களுக்கும் அவரவருடைய உண்மை இயற்கையை உணர்த்துங்கள். உறங்கும் ஆன்மாவை எழுப்புங்கள். ஆன்மா விழித்தெழுந்து வினை செய்யத் தொடங்குங்கால் சக்தி, மகிமை, தூய்மை ஆகிய உயர் நலங்களெல்லாம் தாமே வரும்.

***

"அகம் (நான்) பிரம்மம்" என்று ஓயாது சொல்லிக் கொள்ளுங்கள். இந்த மந்திரம், மனதில் படர்ந்திருக்கும் மாசைப் போக்கி, உள்ளே உறங்கிக்கொண்டிருக்கும் அளவற்ற சக்தியை வெளிக்கொண்டு வரும்.

திரும்பிச் செல்மின். வலிமையும், ஜீவசக்தியும் நிறைந்திருந்த பண்டைக் காலத்துக்குத் திரும்பிச் செல்மின். பண்டை வாழ்வெனும் அமுத ஊற்றிலிருந்து ஜீவநீரை நிரம்பப் பருகி முன்போல் மீண்டும் பலசாலிக ளாகுமின். இந்தியாவில் வாழ்வுக்கு நிபந்தனை இது ஒன்றேயாம்.

***

ஹிந்து சமூக முன்னேற்றத்துக்கு மதத்தை அழித்தல் அவசியமில்லையென்று நான் கூறுகிறேன். தற்போது நமது சமூகம் தாழ்ந்த நிலையிலிருப்பதற்கு மதம் காரணமன் றென்றும், மதத்தை முறைப்படி கைக்கொள்ளாததே காரணமென்றும் சொல்கிறேன். இதில் ஒவ்வொரு வார்த்தையையும் நமது பழைய நூல்களிலிருந்து நிரூபிக்கச் சித்தமா யிருக்கிறேன். என்னுடைய போதனை இதுவேயாகும். இதை நிறைவேற்றி வைப்பதற்கே நமது வாழ்நாள் முழுதும் நாம் போராடவேண்டும்.

## 3. சமூக சீர்திருத்த முறை

நீங்கள் உண்மையான சீர்திருத்தக்காரர்களாக விரும்பினால் மூன்று விஷயங்கள் அவசியம். முதலாவது உணர்ச்சி. உங்கள் சகோதரர்களுக்காக உண்மையிலேயே நீங்கள் இரங்குகிறீர்களா ? இவ்வுலகில் இவ்வளவு துயரமும், அறியாமையும், மூட நம்பிக்கையும் இருந்து வருவது கண்டு உண்மையிலேயே மனம் புண்ணுகிறீர்களா? இந்நாட்டில் வாழும் மனிதர்கள் எல்லாம் உங்கள் சொந்தச் சகோதரர்களே என உணர்கிறீர்களா ? இவ்வுணர்ச்சி உங்கள் உடம்பு முழுவதிலும் ஊறிப் போயிருக்கிறதா ? அது உங்கள் குருதியில்

கலந்து ஓடுகிறதா ? உங்கள் நரம்புகளில் அது துடிக்கிறதா ? உங்கள் உடம்பின் ஒவ்வொரு தசை நாரிலும் அது ஊடுருவி நிற்கிறதா? அவ் வநுதாப உணர்ச்சி உங்களுக்குள்ளே பொங்கித் ததும்புகின்றதா ? அங்ஙனமாயின் முதற்படி ஏறி விட்டீர்கள். அடுத்தாற்போல் பரிகாரம் ஏதேனும் கண்டு பிடித்தீர்களா என்று சிந்திக்கவேண்டும். பழைய கொள்கைகள் மூடக்கொள்கைகளா யிருக்கலாம். ஆனால் அம்மூடக்கொள்கைத் திரளின் உள்ளே சத்தியமென்னும் தங்கக் கட்டிகள் புதைந்து கிடக்கின்றன. குப்பையைப் போக்கிவிட்டுத் தங்கத்தை மட்டும் வைத்துக்கொள்ள நீங்கள் உபாயம் கண்டுபிடித்திருக்கிறீர்களா? மூன்றாவது இன்னும் ஒன்று அவசியம். உங்கள் நோக்கம் என்ன ? பொன்னாசை, புகழாசை, அதிகார ஆசை என்னும் இவை உங்களிடம் அறவே யில்லை யென்று நிச்சயமாய்ச் சொல்ல முடியுமா ?

***

ஆயிரக்கணக்கான மனிதர்களால் மேடைப் பிரசங்கங்கள் செய்யப்பட்டுவிட்டன. ஹிந்து சமூகத்தின் மீதும், ஹிந்து நாகரிகத்தின்மீதும் கணக்கில்லாத கண்டனங்களைச் சொரிந்தாகிவிட்டது. எனினும் காரியத்தில் நற்பயன் எதுவும் விளையக் காணோம். இதன் காரணமென்ன ? காரணங்கண்டுபிடிக்க அதிக சிரமப் படவேண்டியதில்லை. கண்டனத்தில்தான் காரணம் இருக்கிறது. நன்மை புரிவதற்கு வழி கண்டனம் செய்தல் அன்று.

***

நமது நவீன சீர்திருத்த இயக்கங்கள் எல்லாம் பெரும்பாலும் மேனாட்டு உபாயங்களையும் மேனாட்டு

வேலை முறைகளையும் யோசனையின்றிப் பின்பற்று வனவா யிருப்பது குறித்து வருந்துகிறேன். இவை நிச்சயமாய் இந்தியாவுக்குப் பயன்படமாட்டா.

***

இந்தியாவில் சீர்திருத்தக்காரர்கள் எல்லாரும் ஒரு பெரிய தவறு செய்தார்கள். புரோகிதக் கொடுமை முதலிய பயங்கரங்கள் எல்லாவற்றிற்கும் அவர்கள் மதத்தையே காரணமாகக்கொண்டு அழிக்க முடியாத தான சமயமென்னும் கட்டிடத்தை இடிக்க முற்பட் டார்கள். விளைந்ததென்ன ? தோல்வியே !

***

எனக்குச் சீர்திருத்தத்தில் நம்பிக்கையில்லை ; வளர்ச்சியிலேயே நம்பிக்கை உண்டு. நானே கடவுள் ஸ்தானத்தில் இருப்பதாய் எண்ணிக்கொண்டு, " இவ் வழிதான் போகவேண்டும்; அவ்வழி நோக்கக்கூடாது" என்று சமூகத்துக்குக் கட்டளைகள் பிறப்பிக்க எனக் குத் துணிவில்லை.

***

என்னுடைய இலட்சியம், தேசிய வழிகளில் வளர்ச்சி, விஸ்தரிப்பு, அபிவிருத்தி என்னும் இவை யாகும்.

***

மனிதன் எந்நிலையி லுள்ளானே அந்நிலையில் அவனை ஏற்றுக்கொண்டு அங்கிருந்து மேலே தூக்கி விடுங்கள்.....நீங்களும் நானும் என்ன செய்ய முடி யும் ? ஒரு குழந்தைக்கேனும் அது அறியாத ஒன்றை நீங்கள் சொல்லிக் கொடுக்கமுடியுமா ? ஒருகாலும் முடியாது. குழந்தை தனக்குத் தானே பாடங்கற்றுக் கொள்கிறது. அதற்குச் சந்தர்ப்பங்களை ஏற்படுத்திக்

கொடுத்தலும், வழியிலுள்ள தடைகளை நீக்குதலுமே உங்கள் கடமை. செடி வளர்கிறது. அதை வளரச் செய்பவர்கள் நீங்களா? அதைச் சுற்றி வேலி எடுத்து ஆடுமாடு மேயாமல் பார்த்துக் கொள்வதே உங்கள் கடமை. செடி தனக்குத் தானே வளர்கிறது.

***

தேசிய வாழ்வுக்கு உணவு என்ன வேண்டுமோ அதை அளியுங்கள். ஆனால் வளர்ச்சி அதனுடையதே யாகும். அதன் வளர்ச்சி குறித்து அதற்கு யாரும் கட்டளையிட முடியாது.

***

முற்றும் மூட நம்பிக்கை கொண்டதும், முழு அறிவீன முள்ளதுமான ஸ்தாபனங்களைக் கூடக் கடு மொழியால் கண்டிக்கவேண்டாம். ஏனெனில் அவை முற்காலத்தில் ஏதோ ஒரு நன்மையையே செய்திருக்க வேண்டும்.

***

உலகில் வேறெந்த நாட்டிலுள்ள ஸ்தாபனங் களும், இந்நாட்டு அமைப்புகளைவிட உயர்நோக்கங்கள் கொண்டவை அல்ல என்பதை எப்போதும் நினைவில் வையுங்கள்.

***

தற்போது முழுத் தீமைகளாகக் காணப்படும் வழக்கங்கள்கூட முற்காலத்தில் ஜீவசக்தி யளிப்ப னவா யிருந்திருக்கின்றன. ஆதலின் அவற்றை நாம் நீக்க வேண்டுமானால், அவ்வழக்கங்களைச் சபித்துக் கொண்டு அம்முயற்சியில் இறங்கவேண்டாம். நமது ஜாதியின் பாதுகாப்புக்காகச் செய்திருக்கும் அரிய வேலைக்கு நன்றி யறிதலுடன் அவற்றிற்கு ஆசிகூறிக் கொண்டே விலக்குவோமாக.

என் தேசத்தாரைக் கண்டிப்பதற்கு நான் ஒருப்படேன். அவர்களுக்கு நான் சொல்வதெல்லாம், "நீங்கள் செய்திருப்பது நன்று; ஆனால் இன்னும் அதிக நன்றாய்ச் செய்ய முயலுங்கள்" என்பதே.

***

ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய மோக்ஷத்தைத் தானே தேடிக்கொள்ள வேண்டும். வேறு வழி கிடையாது. தேசங்களும் அப்படியே.....தற்போதுள்ளவற்றைவிடச் சிறந்த புதிய ஸ்தாபனங்கள் ஏற்படும் வரையில், பழைய ஸ்தாபனங்களைத் தகர்க்க முயலுதல் பெருவிபத்தாக முடியும். வளர்ச்சி எப்போதும் படிப்படியாகவே ஏற்படக் கூடும்.

***

இந்தியாவில், ஒரு சமூக சீர்திருத்தத்தைப் பரவச் செய்வதற்கு மார்க்கம், அப்புதிய ஏற்பாட்டால் பாரமார்த்திக வாழ்வு எந்த அளவில் மேன்மையுறும் என்று காட்டுவதேயாகும். அரசியலுக்கும் இது பொருந்தும். அதன் மூலம் தேசத்தின் ஆன்மஞானம் எந்த அளவில் வளர்ச்சியுறும் என்று காட்டியே அரசியல் பிரசாரம் செய்யவேண்டும்.

***

சமூகச் சீர்திருத்தம் எனும் வீண் முயற்சியில் இறங்கவேண்டாம். பாரமார்த்திகச் சீர்திருத்தம் முதலில் ஏற்படாவிட்டால் வேறெந்தச் சீர்திருத்தமும் ஏற்படமுடியாது.

***

விஷயத்தின் மூலவேருக்கே நீங்கள் போக வேண்டும். அதுவே அடிப்படையான சீர்திருத்த

மாகும். தீயை அடியில் வைத்து விடுங்கள். அது எரிந்து எரிந்து மேலெழும்பி வரட்டும்.

***

உங்கள் உதடுகளை மூடிக்கொண்டு உங்கள் இதயத்தைத் திறந்து விடுங்கள். உங்களில் ஒவ்வொருவரும், சுமை முழுதும் தம் தோள்களிலேயே சுமந்திருப்பதாய் எண்ணிக்கொண்டு உங்கள் நாட்டின் கதிமோக்ஷத்துக்காகவும், உலகத்தின் கதிமோக்ஷத்துக்காகவும் உழையுங்கள்.

***

நோயின் காரணங்களை வேருடன் களைந்து விடலே என் சிகிச்சை முறையாகும். அவற்றை மூடி வைப்பதன்று.

***

நன்மையான சமூக மாறுதல்கள் எல்லாம் உள்ளே வேலைசெய்யும் பாரமார்த்திக சக்திகளின் வெளித் தோற்றமேயாகும். இந்த சக்திகள் வலிமை பொருந்தி யிருப்பின், சீராக அமையின், சமூகமும் அதற்கிணங்க ஒழுங்காக அமையும்.

## 4. கல்வி—எல்லாச் சமூகத் தீமைகளுக்கும் அருமருந்து

தேசத்தின் பாரமார்த்திகக் கல்வியும் லௌகிகக் கல்வியும் நம் வசத்தில் இருக்க வேண்டும். உங்களுக்கு விளங்குகிறதா? அதைப் பற்றியே நீங்கள் கனவு காணவேண்டும். அதைப்பற்றியே பேசவும், நினைக்கவும் வேண்டும். அதைச் செயலில் நடத்தி வைக்கவும் வேண்டும். அது வரையில் இந்த ஜாதிக்குக் கதிமோக்ஷம் இல்லை.

என் வாழ்க்கையின் பேரவா இதுதான்: ஒவ்வொருவனுடைய வீட்டு வாசலுக்கும் உயர்ந்த கருத்துக்களைக் கொண்டு போகக்கூடிய ஓர் இயக்கத்தை ஏற்படுத்தி அதை நடத்தி வைத்தல்; பின்னர் ஜனங்களைத் தங்கள் விதியைத் தாங்களே நிர்ணயித்துக் கொள்ளும்படி விட்டுவிடுதல். வாழ்க்கையின் மிக முக்கியமான பிரச்னைகளைப் பற்றி நமது மூதாதைகள் கொண்டிருந்த கருத்துக்களையும், பிற நாட்டாரின் கொள்கைகளையும் அவர்கள் தெரிந்துகொள்ளட்டும். தற்போது அயல் நாட்டார் என்ன செய்து வருகிறார்களென்பதையும் அவர்கள் பார்க்கட்டும். பின்னர் தங்களுக்குத் தாங்களே முடிவு செய்து கொள்ளட்டும். இரசாயனப் பொருள்களை ஒன்று சேர்த்து வைப்பதே நமது வேலை; இயற்கைச் சட்டங்களின்படி அவை தாமாக மாறுதலடையும்.

***

பெண்களைப் பொறுத்த வரையில் மிக முக்கியமான பிரச்னைகள் பல உண்டு என்பதில் சந்தேகமில்லை. ஆனால் "கல்வி" என்னும் மந்திரத்தினால் தீர்த்து வைக்க முடியாதது அவற்றில் எதுவுமில்லை.

***

தற்போது நீங்கள் பெற்றுவரும் கல்வியில் சில நல்ல அம்சங்கள் இருக்கின்றன. ஆனால் அதிலுள்ள ஒரு பெரிய பிரதிகூலத்தினால் அந்த நல்ல அம்சங்களெல்லாம் அமிழ்த்தப்பட்டு விடுகின்றன. முக்கியமாக, அது மனிதத்தன்மை அளிக்கும் கல்வியன்று; முழுதும் எதிர்மறைக் கல்வி. இது கெட்டது, அது கெட்டது என்றே எப்பொழுதும் கூறும் எதிர்மறையான பயிற்சி மரணத்தைவிடக் கொடியதாகும்.

இப்பொழுது நம் நாட்டில், குழந்தை பள்ளிக் கூடம் சென்றதும் முதன் முதலில் கற்றுக்கொள்வ தென்ன? தன் தந்தை மூடன் என்பதேயாகும். இரண்டாவதாக, தன் பாட்டன் பெரிய பைத் தியக்காரனென்றும், மூன்றாவதாகத் தன் உபாத்தி யாயர்களெல்லாரும் ஆஷாட பூதிகள் என்றும், நான்காவதாக, வேத சாஸ்திரங்கள் எல்லாம் வெறும் பொய்க் களஞ்சியங்கள் என்றும் அவன் கற்றுக்கொள் கிறான். அவனுக்குப் பதினறு வயதாகும்போது, உயிரற்ற, எலும்பற்ற, எதிர்மறைப் பிண்டமாக இருக் கிறான். எல்லாம் அவனுக்குக் கெடுதலாகவே காணப் படுகின்றன.



அப்பப்பா! பி. ஏ. பட்டத்திற்காக என்ன தட புடல்? என்ன ஆர்ப்பாட்டம்? சில நாளைக்குள் அவ் வளவும் பறந்து விடுகின்றது. கடைசியில் அவர்கள் கற்றுக் கொள்வதுதான் என்ன? நம்முடைய சமயம், பழக்க வழக்கங்கள் எல்லாம் கெட்டவை என்றும், மேனுட்டாருடையன வெல்லாம் நல்லவையென்றும் கற்றுக்கொள்கிறார்கள்! அவ்வளவுதான்! இக்கல்வி யினல் அவர்கள் தங்கள் பசிப் பிணியைக்கூட நீக்கிக் கொள்ள முடிவதில்லை. இத்தகைய உயர்தரக் கல்வி இருந்தாலென்ன? போனலென்ன? இதைவிட ஜனங் கள் சிறிதளவு தொழிற்கல்வி பெறக்கூடுமானல் நன்மையுண்டு. "உத்தியோகம், உத்தியோகம்" என்று அடித்துக்கொண்டு திரிவதற்குப் பதிலாக அவர்கள் ஏதேனும் தொழில் செய்து ஜீவனோபாயம் தேடிக்கொள்வார்கள்.

கழுதையை நன்கு புடைத்தால் அது குதிரை யாகி விடு மென்று யாரோ சொல்லக் கேட்டு அவ் விதமே ஒருவன் செய்தான் என்றொரு கதை உண்டு. இத்தகைய முறையிலேயே நமது சிறுவர்களுக்குக் கல்வி யளிக்கப்பட்டு வருகிறது. இம்முறை தொலைய வேண்டும்.

***

மனிதனுக்குள் ஏற்கெனவே இருக்கும் பூர ணத்துவத்தை விகசிக்கச் செய்வதே கல்வியாகும்.

***

கல்வி என்பது, ஒருவனுடைய மூளையில் பல விஷயங்களைத் திணித்து விடுவதன்று. அவ்விதம் திணிக்கப்படும் விஷயங்கள் அங்கே வாணாள் முழு தும் செரியாமல் உபத்திரவித்துக் கொண்டிருக்கின் றன. அதனால் என்ன பயன்? கற்கும் விஷயங்கள் நன்கு ஜீரணமாக வேண்டும். அவை உயிர் ஊட்டுவன வாய், மனிதத்தன்மை தருவனவாய், ஒழுக்க மமைப் பனவா யிருக்கவேண்டும். நீங்கள் ஐந்தே ஐந்து கருத் துக்களை ஜீரணித்துக் கொண்டு அவற்றை உங்கள் வாழ்க்கையிலும், நடக்கையிலும் ஊடுருவி நிற்கும்படி செய்வீர்களானால், ஒரு பெரிய புத்தகசாலை முழுவதை யும் மனப்பாடம் செய்திருப்பவனை விடப் பெரிய கல்விமான்களாவீர்கள்.

***

உயர்தரக் கல்வியின் உபயோகம் யாது? வாழ்க் கையின் பிரச்னைகளைத் தீர்த்து வைத்த லெப்படி எனக் கண்டுபிடிப்பதே. நவநாகரிக உலகின் மிகச் சிறந்த அறிஞர்களின் கவனத்தை யெல்லாம் தற் போது கவர்ந்திருப்பது இவ்விஷயமே யாகும்.

ஆனால் நம் தேசத்தில் அதற்குரிய வழி ஆயிரம் ஆயிர மாண்டுகளுக்கு முன்னாலேயே கண்டுபிடிக்கப்பட்டு விட்டது.

***

ஒழுக்கமளிப்பது, மனோவலிமை தருவது, புத்தியை விசாலிக்கச் செய்வது, ஒருவனைத் தன் வலிமை கொண்டு நிற்கச் செய்வது ஆகிய இத்தகைய கல்வி நமக்கு வேண்டும்.

***

மனிதத் தன்மை அளிப்பதே கல்விப் பயிற்சியின் இலட்சியமாயிருத்தல் வேண்டும். அதற்குப் பதிலாக நாம் எப்போதும் வெளிப் புறத்துக்கு மெருகு கொடுப்பதிலேயே ஈடுபட்டிருக்கிறோம். உள்ளே ஒன்றுமில்லாதிருக்கையில் வெளிப்புறத்துக்கு மெருகிட்டுக்கொண்டிருப்பதால் யாதுபயன்?

***

பண்டைக் காலத்துக் குருகுலங்களைப் போன்ற கல்வி ஸ்தாபனங்கள் தேவை. அவற்றில் மேனாட்டுப் பௌதிக சாஸ்திரத்துடன் வேதாந்தமும் கற்பிக்கப்பட வேண்டும். பிரம்மசரியம், சிரத்தை, தன்னம்பிக்கை என்னும் அடிப்படைகளின்மீது கல்வி அளிக்கப்பட வேண்டும்.

***

ஆசிரியன் தான் கற்பிப்பதாக எண்ணுவதினாலேயே எல்லாவற்றையும் கெடுத்து விடுகிறான். சகல ஞானமும் மனிதனுக்குள் இருக்கிறதென்று வேதாந்தம் சொல்கிறது. அந்த ஞானம் ஒரு சிறுவனுக்குள்ளும் இருக்கிறது. அதை எழுப்புதலே தேவை. அதுவே ஆசிரியனின் வேலை. சிறுவர்கள் தங்கள்

சொந்த அறிவை உபயோகப்படுத்தவும், தங்கள் கால், கை, கண், செவி இவற்றை முறையாகப் பயன் படுத்தவும் தெரிந்து கொள்ளும் அளவில் நாம் அவர்களுக்கு உதவி செய்தால் போதும். மற்ற எல்லாம் தாமே எளிதாகி விடும்.

***

உங்களால் ஒரு செடியை வளர்க்க முடியுமா? அது போன்றே ஒரு குழந்தைக்கு நீங்கள் எதுவும் கற்பித்தல் இயலாத காரியம். செடி தானே வளர உதவி மட்டுமே நீங்கள் செய்ய முடியும். கல்வி விஷயமும் இவ்வாறுதான். கல்வி என்பது உள்ளிருந்து விகசிப்பது. அது தன் னியற்கையினுல் வளர்ச்சி யுறுகிறது. அதன் வளர்ச்சிக்குத் தடையாயுள்ளவைகளை நீக்குவது மட்டுமே நீங்கள் செய்யக் கூடியதாகும்.

***

நமது நாட்டின் கல்வி முழுதும், பாரமார்த்திகக் கல்வியாயினும் சரி, லௌகிகக் கல்வியாயினும்சரி, நம் கையிலேயே இருத்தல்வேண்டும். கூடியவரையில் தேசிய வழிகளில் தேசிய முறைகளிலேயே கல்வி யளித்தல் வேண்டும்.

***

நமக்கு வேண்டுவதென்னவென நீங்கள் அறிவீர்கள். அன்னியநாட்டு ஆதிக்கமின்றி நமது சொந்த ஞானத்துறைகள் எல்லாவற்றையும் நாம் ஆராய்ச்சி செய்தல் வேண்டும். அத்துடன் ஆங்கில பாஷையையும், மேனுட்டு பௌதிக சாஸ்திரத்தையும் கற்கவேண்டும். இவையல்லாமல், தொழிற்கல்வியும், தொழில் வளர்ச்சிக்குரிய சகல அறிவும் நமக்குத் தேவை. இதன்

மூலம், படித்தவர்கள் உத்தியோகம் தேடி அலைவதற்குப் பதிலாக, தங்களுக்கு வேண்டிய அளவு சம்பாதித்துக் கொள்ளவும், கஷ்டகாலத்துக்குச் சிறிது பொருள் சேர்த்து வைக்கவும் சாத்தியமாதல் வேண்டும்.

***

சுடர்விட்டெரியும் தீயை யொத்த தூய ஒழுக்கமுடைய ஆசிரியனோடு ஒருவன் தன் குழந்தைப் பிராயத்திலிருந்து வசித்தல் வேண்டும். உயரிய கல்விப் பயிற்சிக்கு உயிருள்ள ஓர் உதாரணமாக அவ்வாசிரியன் இருத்தல் வேண்டும்.

***

பொய் சொல்லுதல் பாவம் என்று படிப்பதால் மட்டும் பயன் என்ன ? ஒவ்வொரு சிறுவனும் பூரண பிரம்மசர்யத்தை அனுஷ்டிக்குமாறு பயிற்சி செய்யப் படவேண்டும். பக்தியும் சிரத்தையும் அப்போது தான் உண்டாகும். பக்தி சிரத்தை யில்லாத ஒருவன் பொய் கூறுதிருப்பது எங்ஙனம் ?

***

சிறுவர்களுக்குத் தகுந்ததான ஒரு புத்தகம் கூட நம் நாட்டில் இல்லை. இராமாயணம், மகாபாரதம், உபநிஷதங்கள் இவற்றிலிருந்து சிறு கதைகளடங்கிய சில புத்தகங்களைத் தாய்மொழியிலும், ஆங்கிலத்திலும் நாம் தயாரிக்கவேண்டும். அவை மிக எளிய நடையில் எழுதப்படவேண்டும்.

## 5. பாமரர் முன்னேற்றம்

நமது மூதாதைகளில் பிரபு குலத்தவர்கள் நாட்டின் பாமர மக்களைத் தங்கள் காலின்கீழ் நசுக்கிக் கொண்டே வந்ததின் பயனாக அவ்வேழை மக்கள்

திக்கற்றவர்களாகிக் கடைசியில் பாவம், தாங்கள் மக்கட் குலத்தவர் என்பதையே அநேகமாக மறந்துவிட்டனர்.

***

நூற்றுக் கணக்கான ஆண்டுகளாய் அவர்கள் பிறருக்கு உழைக்கும்படி கட்டாயப் படுத்தப் பட்டவர்களாதலின், நாம் அடிமைகளாகவே பிறந்தோம், குற்றேவல் புரியவே வாழ்க்கை யெடுத்தோம் என்று அவர்கள் உண்மையாகவே நம்பத் தலைப்பட்டனர்.

***

ஹிந்து மதத்தைப்போல மக்கட் குலத்தின் மேன்மையை உயர்வுபடுத்திக் கூறும் மதம் இப்பூவுலகில் பிறிதொன்றில்லை; ஹிந்து மதத்தைப்போல் இப்பொழுது அனுஷ்டானத்தில் ஏழை எளியவர்களை மிதித்து நசுக்கும் மதமும் வேறொன்றில்லை.

***

இந்தியாவில் ஏழை எளியவர்களுக்கும், பாவிகளுக்கும் துணையே கிடையாது; நண்பர்கள் இல்லை. அவர்கள் எவ்வளவுதான் முயன்றாலும் முன்னேற முடியாது. ஒவ்வொரு நாளும் அவர்கள் தாழ்ந்து கொண்டே யிருக்கிறார்கள். கொடூரமான சமுதாயமானது அவர்கள்மீது சொரிந்துகொண்டே யிருக்கும் அடிகளை அவர்கள் உணருகிறார்கள். ஆனால் அவ்வடிகள் எங்கிருந்து வருபவை என்று அவர்களுக்குத் தெரிவதில்லை. தாங்களும் மனித குலத்தைச் சேர்ந்தவர்களே என்பதை அவர்கள் மறந்தே விட்டார்கள். இதன் பயனே அடிமைத்தனமாகும்.

பாமரஜனங்களை அசட்டை செய்ததே நமது தேசீயப் பெரும்பாவம் என்று நான் கருதுகிறேன். நமது வீழ்ச்சியின் காரணங்களுள் அது ஒன்ருகும். இந்தியாவின் பாமர மக்கள் கல்விப்பயிற்சி யுடையவர் களாய், வயிற்றுச்சோற்றுக்குக் கவலையற்றவர்களாய் ஆகும் வரையில் அரசியல் அரசியல் என்று எவ்வளவு தான் கூச்சலிட்டாலும் பயன் விளையாது. அப்பாமர ஜனங்களே நமது கல்விக்குப் பணந் தருகிருர்கள். நமது கோயில்களை அவர்களே கட்டுகிருர்கள். பதி லுக்கு அவர்கள் பெறுவதென்ன? உதைகள் தான்! ஏறக்குறைய அவர்கள் நமது அடிமைகளாகி விட்டார் கள். பாரதநாட்டை நாம் புனருத்தாரணம் செய்ய விரும்பினல் இப்பாமர ஜனங்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும்.

***

இந்தியாவிலுள்ள லட்சோப லட்சம் ஏழை களின் துயரங்களையும் துன்பங்களையும் நினைந்து உண் மையில் கண்ணீர் விடுவோர் எத்தனை பேர் இருக்கின் றனர்? நாமும் மனிதர்கள் தானு? அவர்களுடைய பசி தீர்வதற்காக, அவர்களுடைய முன்னேற்றத்துக்காக நாம் செய்வது என்ன? அவர்களை நாம் தொடுவதில்லை. அவர்கள் அருகிலும் நெருங்குவதில்லை! நாம் மனி தர்களா?

***

நான் ஏழை; நான் ஏழைகளை நேசிக்கிறேன். இந்நாட்டில் (அமெரிக்காவில்) ஏழைகள் எனப்படு வோரைப் பார்க்கிறேன்; அவர்கள் கதிக்கிரங்குவோர் எத்தனை பேர் உளர் என்பதையுங் காண்கிறேன். இந் நாட்டுக்கும் இந்தியாவுக்கும் எவ்வளவு பெரிய வேற்

றுமை? இந்தியாவில், நித்திய தரித்திரத்திலும், அறியாமையிலும் மூழ்கிக் கிடக்கும் இருபது கோடி ஸ்திரீ புருஷர்களுக்காக இரங்குவோர் யார்? அவர்கள் முன்னேற்றத்துக்கு வழி என்ன? அவர்கள் கல்வி யறிவில்லாதவர்கள்; ஒளி காணுமல் தவிக்கிறுர்கள். அவர்களுக்கு அறிவொளியை அளிப்போர் யாவர்? வீட்டுக்கு வீடுசென்று அவர்களுக்குக் கல்வி புகட்ட யார் தயாராயிருக்கிறுர்?

* * *

தேசம் குடிசையில் இருக்கிறதென்பதை நினைவு கூருங்கள். ஆனுல் அந்தோ! அக்குடிசைகளில் வதிவோருக்கு எவரும் எதுவும் செய்தாரில்லை.

* * *

ஒரு தேசத்தினுடைய கதி மோட்சம் அந்நாட்டிலுள்ள விதவைகள் பெறும் கணவர்களின் தொகையையா பொறுத்திருக்கிறது? அன்று, அன்று. பாமர மக்களின் நிலையையே அது சார்ந்ததாகும். அப்பாமர ஜனங்களை உங்களால் கைதூக்கிவிட முடியுமா? அவர்கள் இயல்பாகப் பெற்றுள்ள பாரமார்த்திகத் தன்மையை இழந்துவிடாத வகையில், அவர்கள் இழந்துவிட்ட தன்னம்பிக்கையை நீங்கள் அவர்களுக்குத் திரும்ப அளிக்க முடியுமா?

* * *

இந்நாட்டில் லட்சோப லட்சம் ஏழை மக்கள் பசிப்பிணிக்கும், அறியாமைக்கும் இரையானவர்களாயிருக்கும் வரையில், அவர்களுடைய உழைப்பின் பயனைக்கொண்டு கல்வி கற்று அவர்களைக் கவனியாதிருக்கும் ஒவ்வொரு மனிதனையும் நான் துரோகி என்றே சொல்வேன்.

துன்பத்திலாழ்ந்த ஏழைகளை வதைத்துப்பெற்ற பணத்தைக்கொண்டு ஆடையாபரணங்களால் தங்களை அலங்கரித்துத் திரியும் மனிதர்கள், பசி பசி என்று பறந்து காட்டு மிராண்டிகளேபோல் வாழும் அந்த இருபது கோடி மக்களுக்காக எதுவும் செய்யாவிடில், அவர்களை நன்றிகெட்ட பாதகர்கள் என்றே நான் கூறுவேன்.

***

வறுமை, புரோகிதம், கொடுங் கோன்மை என்னும் இத்தகைய துன்பங்களால் நசுக்கப்பட்டு உயிர் வாழும் இந்தியாவின் ஏழைகளுக்காக நாம் ஒவ்வொருவரும் இரவு பகல் பிரார்த்தனை செய்வோமாக.

***

ஆண்டவனைத் தேடி நீங்கள் எங்கே போகிறீர்கள் ? துன்பப்பட்டவர்கள், ஏழைகள், பலவீனர்கள் இவர்கள் எல்லாரும் அத்தனை தெய்வ வடிவங்களே யல்லவா ? ஏன் முதலில் இவர்களை ஆராதிக்கக் கூடாது ? கங்கைக்கரையில் கிணறு வெட்டப் போதல் உண்டா ? இந்த ஏழைகளையே உங்கள் கடவுளாய்க் கொள்ளுங்கள். அவர்களைப்பற்றிச் சிந்தியுங்கள் ; அவர்களுக்கு ஊழியம் புரியுங்கள் ; அவர்களுக்காக இடைவிடாது பிரார்த்தனை செய்யுங்கள். அப்போது ஆண்டவன் உங்களுக்கு வழிகாட்டுவார்.

***

எவனுடைய இதயம் ஏழைகளுக்காக இரத்தம் வடிக்கிறதோ அவனையே நான் மகாத்மா வென்பேன் ; மற்றவர்கள் துராத்மாக்களே யாவர்.

நான் தத்துவ ஞானியல்லேன்; ஆத்ம ஞானியுமல்லேன். நான் ஏழை; ஏழைகளை நேசிக்கிறேன். அவ்வளவு தான்.

***

நமது பாமர ஜனங்கள் உத்தமர்கள். ஏனெனில் நமது நாட்டில் ஏழ்மை ஒரு குற்றமாகக் கருதப்படுவதில்லை. நமது பாமரர்கள் பலாத்காரப் பற்றுள்ளவர்கள் அல்லர். ஐரோப்பாவிலுள்ள பாமர ஜனங்களைவிட நம்முடைய பாமர ஜனங்கள் அதிக நாகரிகமடைந்தவர்கள். இவர்களுக்கு நாம் லௌகிகக் கல்வி யளித்தல் வேண்டும். நமது மூதாதைகள் விடுத்துப் போயுள்ள உபாயத்தையே நாமும் கடைப்பிடிக்க வேண்டும். அதாவது எல்லா உயரிய இலட்சியங்களும் மெள்ள மெள்ளப் பாமர ஜனங்களிடையே வேரூன்றச் செய்யவேண்டும். அவர்களை மெதுவாக உயர்த்துங்கள்; சமத்வம் பெறுமாறு உயர்த்துங்கள். லௌகிகக்கல்வி கூட மதத்தின் மூலமாகவே அளியுங்கள்.

***

வேத மந்திரங்களில் பிராம்மணர்களுக்கு எவ்வளவு உரிமையுண்டோ அவ்வளவு உரிமை அவர்களுக்கும் உண்டென்பதை அவர்கள் மனதில் பதியச் செய்யுங்கள். அவ்வாறே வாழ்க்கைக்கு அவசியமான விஷயங்கள், வியாபாரம், விவசாயம், கைத்தொழில் ஆகியவைகளைப் பற்றியும் எளிய மொழிகளில் அவர்களுக்குச் சொல்லுங்கள். உங்களால் இது செய்ய முடியாவிடில் உங்கள் கல்வியும், பயிற்சியும், வேதாத்தியயனமும், வேதாந்த விற்பத்தியும் பழிக்குரியனவாகின்றன.

வயிற்றுக் கடவுள் பூசையே இப்போது முதன்மையான தேவையாகும். வயிற்றுக் கடவுளை முதலில் திருப்தி செய்தாலன்றி உங்கள் சமய உபதேசங்களுக்கு யாரும் செவி கொடார். முதலில் இந்தக் கொடிய பட்டினியை நீக்குங்கள். நீங்கள் யாருக்கு மதபோதனை செய்ய விரும்புகிறீர்களோ அவர்கள் இடைவிடாமல் தங்கள் வயிற்றுப் பிழைப்பைப் பற்றியே சிந்திக்க வேண்டியவர்களா யிருக்கிறார்கள். அவர்களுக்கு இந்தக் கவலை யில்லாமல் செய்தாலன்றி உங்கள் உபந்நியாசங்களும் பிறவும் எவ்வகைப் பயனும் தரமாட்டா.

***

நமக்கு இப்போது வேண்டியது ஏராளமான இராஜச சக்தியாகும். ஏனெனில் தேசமனைத்தும் இதுகாலை தாமஸத்தில் மூழ்கியிருக்கிறது. இந்நாட்டு மக்களுக்குப் பசிக்கு உணவும், உடுக்கத் துணியும் அளிக்க வேண்டும்; அளித்து அவர்களைத் தூக்கத்தினின்றும் எழுப்ப வேண்டும்; எழுப்பி முழு மனதுடன் செயலில் இறங்கச் செய்யவேண்டும்.

***

வாழ்க்கையின் மிக முக்கியமான பிரச்னைகளைப் பற்றி நமது முன்னோர்களும் மற்ற நாட்டாரும் கொண்ட கொள்கைகள் அவர்களுக்குத் தெரிவிக்கப் பட வேண்டும். முக்கியமாக, தற்போது மற்ற நாட்டார் என்ன செய்துகொண் டிருக்கிறார்கள் என்பதை அவர்களே பார்த்துத் தாங்கள் செய்தற்குரிய தென்ன வென்று முடிவு செய்ய வேண்டும். இரசாயனப் பொருள்களைச் சேர்த்து வைப்பதே நம்முடைய

வேலை. அப்போது அதினின்றும் புதியதோர் இரசாயனப் பொருள் இயற்கை விதிகளின்படி உற்பத்தியாகி விடுகிறது.

***

கொஞ்சம் நிதிசேர்த்துக் கொள்ளுங்கள். பின்னர், சில ஜால விளக்குகள் (Magic Lantern), தேசபடங்கள், பூகோளங்கள், இரசாயனப் பொருள்கள் இவற்றைச் சேகரித்துக் கொள்ளுங்கள். ஒவ்வொரு நாள் மாலையும் ஏழை எளியவர்கள் தாழ்த்தப்பட்டவர்களின் கூட்டம் ஒன்று சேருங்கள். முதலில் சமயத்தைப்பற்றி உபந்நியாசம் செய்யுங்கள்; பிறகு ஜால விளக்கு முதலியவற்றின் உதவியினால் வானநூல், பூகோள சாஸ்திரம் முதலியன ஜனங்களின் தாய்மொழியின் மூலம் கற்பியுங்கள்.

***

இந்தியாவிலும் வெளி நாட்டிலும் மக்கட் குலமானது எத்தனை யெத்தனை உயரிய கருத்துக்களை வளர்த்திருக்கிறதோ அவ்வளவையும், ஏழையிலும் ஏழையும் தாழ்ந்தவரிலும் தாழ்ந்தவனும்கூட அடையுமாறு அவர்களுடைய வீட்டுக்கே கொண்டு செல்லுதல்; பின்னர் அவர்களைத் தங்களுக்குத் தாங்களே சிந்திக்கச் செய்தல்; இவையே என்னுடைய அவாவாகும்.

***

“பாமர ஜனங்களின் மதத்துக்கு ஊறு செய்யாமல் அவர்களை முன்னேற்றுதல்” என்பதையே உங்கள் வாழ்க்கை நோக்கமாய்க் கொள்ளுங்கள்.

# 6. பெண்மக்கள் முன்னேற்றம்

பல நூற்றுண்டுகளாகப் பலவகைச் சந்தர்ப்பங்களினுல் நமது பெண்களுக்குப் பாதுகாப்பு அவசியமாயிருந்து வந்திருக்கிறது. நமது பழக்க வழக்கங்களுக்கு உண்மைக் காரணம் இதுவேயன்றி, ஸ்திரீகள் தாழ்ந்தவர்கள் என்னும் கொள்கையன்று.

***

நமது பெண்கள் திக்கற்றவர்களாகவும், பிறரை நம்பி வாழ்பவர்களாகவும் நீண்ட காலமாகப் பயிற்சி செய்யப்பட்டு வந்திருக்கின்றனர். இதன் பயனுக, மிகச் சிறு அபாயம் அல்லது துன்பம் நேர்ந்துவிட்டாலும் அவர்கள் கண்ணீர் பெருக்குவதற்கே தகுந்தவர்களாகி விட்டனர்.

***

குடும்ப வாழ்க்கையைப் பொறுத்தவரை, இந்தியாவில் வழங்கும் முறைகள் மற்ற எந்த நாட்டாரின் முறைகளினும் பல அம்சங்களில் உயர்ந்தவை என்று நான் திட்டமாகக் கூறுவேன்.

***

இந்தப் புண்ணிய பாரத பூமியில், சீதையும் சாவித்ரியும் வாழ்ந்த இந்நாட்டில், இன்னமும் பெண்மைக்கு இலக்கியமானவர்களைக் காணலாம். அவ்வளவு தூய நடக்கையும், தொண்டில் விருப்பமும், அன்பும், தயாளமும், திருப்தியும், பக்தியும் ஒருங்கே வாய்ந்த பெண்களை உலகில் வேறெந்த நாட்டிலும் நான் காண்பதற்கில்லை.

ஸீதைக்குப் பிறப்பளித்த ஒரு ஜாதியார் பெண் குலத்தினிடம் வைத்திருக்கும் மரியாதை உலகில் ஒப்புவமை யற்றதா யிருக்குமென நான் அறிவேன். ஸீதை அவர்கள் கனவில்கண்ட பெண்ணரசியா யிருப்பி னுங் கூட இது பொருந்தும்.

***

பண்டை நாளில் ஆரண்யங்களில் நடைபெற்ற நமது சர்வகலாசாலைகளில் - குருகுலங்களில் - சிறுவர் சிறுமிகளுக்கு அளிக்கப்பட்ட சமத்வத்தினும் பூரண சமத்வம் வேறுண்டா? நமது சம்ஸ்கிருத நாடகங்களைப் படியுங்கள். சகுந்தலையின் சரிதத்தைப் படித்துவிட்டு, டென்னிஸன் இயற்றிய "இளவரசி" என்னும் கவிதை நமக்குக் கற்பிக்கக் கூடியது ஏதேனு முண்டாவெனப் பாருங்கள்.

***

விதவைகளின் பிரச்னையைப் பற்றியும், பொதுவாக ஸ்திரீகள் நிலையைப் பற்றியும் எனது கருத்தென்னவென்று அடிக்கடி கேட்கப்படுகிறது. நான் இதற்கு முடிவான பதிலாகச் சொல்வதென்னவெனில்,—இந்த அசட்டுக் கேள்வியை என்னிடம் ஏன் கேட்கிறீர்கள்? நான் விதவையா? அல்லது ஸ்திரீயா? பின்னர், என்னை ஏன் கேட்கவேண்டும்?

***

பெண் மக்கள் சம்பந்தமான பலமுக்கிய பிரச்னைகள் உண்டென்பது உண்மையே. ஆனால் "கல்வி" என்னும் மந்திரத்தினால் தீர்த்து வைக்க முடியாதது அவற்றில் எதுவுமில்லை.

ஸ்திரீகளின் பிரச்னைகளைத் தீர்த்து வைப்பதற்கு நீ யார்? ஒவ்வொரு விதவையையும், ஸ்திரீயையும் அடக்கி ஆள்வதற்கு நீ என்ன, அவர்களைப் படைத்த ஆண்டவனு? விலகி நில். அவர்கள் தங்கள் பிரச்னைகளைத் தாங்களே தீர்த்துக் கொள்வார்கள்.

***

உங்கள் பெண்மக்களுக்குக் கல்வி யளியுங்கள்; பின்னர் அவர்கள் போக்கில் விட்டு விடுங்கள். தங்களுக்கு என்னென்ன சீர்திருத்தங்கள் வேண்டுமென்று அவர்களே சொல்வார்கள். அவர்களைப் பொறுத்த விஷயங்களில் தீர்ப்புச் சொல்ல உங்களுக்கென்ன அதிகாரம்?

***

ஹிந்து பெண்மணிகளில் பெரும்பான்மையோரால் நினைக்கவும் முடியாத அளவு ஒவ்வோர் அமெரிக்கப் பெண்மணியும் கல்வி பயின்றிருக்கிருள். நமது பெண்களும் ஏன் அத்தகைய கல்வி பெறுதல் கூடாது? பெற்றே யாதல்வேண்டும்.

***

அமெரிக்காவில் ஆண் மக்கள் தங்கள் பெண் மக்களை மிக நன்ருக நடத்துகிருர்கள். எனவே அவர்கள் செல்வத்திலும் கல்வியிலும் சிறந்து, ஊக்கமுடைய சுதந்திர வாழ்வு நடத்துகிருர்கள். ஆனல் நாம் துன்பத்தி லாழ்ந்து நடைபிணங்கள்போல் அடிமை வாழ்வு வாழ்வதேன்? இதற்கு விடை சொல்ல வேண்டுவ தில்லை.

பெண் கல்விக்கு ஆரம்பம் செய்வதெப்படி? கற்பு என்பது ஹிந்து மாதரின் பரம்பரைச் செல்வம். எனவே, கற்பு என்றால் என்னவென்று அவர்கள் எளிதில் அறிந்து கொள்வார்கள். முதலில், இந்த இலட்சியத்தை அவர்களிடையே உறுதிப் படுத்துங்கள். இதனால் அவர்கள் சிறந்த ஒழுக்க வலிமை பெறுவார்கள். அவர்கள் இல்லறத்தை மேற்கொள்ளலாம்; அல்லது விரும்பின் கன்னிகைகளாகவே காலங்கழிக்கலாம். எங்ஙனமாயினும், அவர்கள் வாழ்க்கையின் ஒவ்வொரு படியிலும், தங்கள் கற்பினின்று ஓரணுவேனும் வழுவுவதினும் உயிரையே விட்டுவிடவும் அஞ்சாத மனத்திண்மை பெறுவார்கள்.

***

ஸ்திரீகள் தங்களுடைய பிரச்னைகளைத் தாங்களே தீர்த்துக் கொள்ளும்படியான நிலைமைக்கு அவர்களைக் கொண்டு வந்து விடவேண்டும்.

***

நமது பாரதத் தாயின் க்ஷேமத்திற்கு அவளுடைய புதல்வர் புதல்விகளில் சிலர் ஆத்மத் தூய்மையுள்ள பிரமசாரிகளாகவும், பிரமசாரிணிகளாகவும் வாழ்வு நடத்தல் அவசியமா யிருக்கிறது.

***

தற்காலத்தின் தேவைகளை முன்னிட்டு ஆராய்ந்தால், பெண்மக்களில் சிலரைத் துறவு இலட்சியங்களில் பற்றுண்டாமாறு பயிற்சி செய்தல் அவசியமெனக் காண்கிறது. அவர்கள் அநாதி காலமாகத் தங்களுடைய இரத்தத்தில் ஊறிப்போயிருக்கும் பதிவிரதா தர்ம பலத்தினால் ஊக்கமடைந்து வாணாள் முழுதும் கன்

விகைகளாக இருந்து தொண்டு செய்வதாக விரதங் கொள்ளவேண்டும்.

***

நவீன பௌதிக சாஸ்திரங்கள் அவர்களுக்குக் கற்பிக்கப்படவேண்டும். அவர்களுக்கும் மற்றவர்களுக்கும் பயன்படக் கூடிய வேறு விஷயங்களும் கற்பிக்கப்படவேண்டும்.

***

தேச சரித்திரம், புராணங்கள், குடும்ப நிர்வாக முறைகள், உயர் கலைகள், சன்மார்க்க தத்துவங்கள் இவை எல்லாம் நவீன பௌதிக சாஸ்திரத்தின் துணைகொண்டு அவர்களுக்குக் கற்பித்தல் வேண்டும். அத்துடன் அறநெறியிலும் பாரமார்த்திக வாழ்க்கையிலும் பயிற்சி யளிக்கவேண்டும். உரிய காலத்தில் அவர்கள் அன்னைமார்களுக்கு இலக்கியங்களாய் விளங்கும் வண்ணம் பயிற்சி செய்வித்தல் வேண்டும்.

***

பெண் பள்ளிக்கூடங்களில் கல்வி கற்பிக்கும் கடமை, படிப்புள்ள கைம்பெண்களுக்கும் பிரமசாரிணிகளுக்குமே எவ்வாற்றானும் உரியதாகும். இந்த நாட்டில் பெண் பள்ளிக்கூடங்களில் ஆண்மக்களின் தொடர்பை விலக்குதல் நலம்.

***

சமயம், கலைகள், பௌதிக சாஸ்திரம், வீட்டு வேலை, சமையல், தையல், சுகாதாரம் - இவற்றில் எல்லாம் முக்கியமான அம்சங்கள் நமது ஸ்திரீகளுக்குக் கற்பிக்கப்பட வேண்டும். நவீனங்கள், கதைகள் முதலியவை அவர்கள் படித்தல் நன்மையன்று. .... ஆனால் பூஜாவிதிகள் மட்டும் சொல்லிக் கொடுத்த

லும் போதாது. அவர்களுக்களிக்கப்படும் கல்வி எல்லா விஷயங்களிலும் கண் திறப்பதாய் இருக்கவேண்டும். நற்குணங்களுக்கு இலக்கியங்களான பெண்மணிகளின் சரிதங்களை அடிக்கடி பெண் குழந்தைகளுக்குச் சொல்லி, சுயநலத்தியாக வாழ்க்கையில் அவர்களுக்குப் பற்றுண்டாகும்படி செய்யவேண்டும். சீதை, சாவித்ரி, தமயந்தி, லீலாவதி, மீராபாய் முதலிய உத்தமிகளின் உதாரணங்கள் எப்போதும் அவர்கள் உள்ளத்தில் குடிகொண்டிருக்கச் செய்தல் அவசியம். அக்கற்பாசிகளை இலக்கியமாகக் கொண்டு அவர்கள் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளுமாறு செய்தல் நமது கடமையாகும்.

***

இந்நாட்டின் ஆண் மக்களுக்கு நான் சொல்வதையே பெண்மணிகளுக்கும் கூறுவேன். இந்தியாவிலும், இந்திய தர்மத்திலும் நம்பிக்கை வையுங்கள். பலசாலிகளாயும், வருங்காலத்தில் நம்பிக்கையுடையவர்களாயு மிருங்கள். உங்களுடைய பழைய நாகரிகத்தைக் குறித்து வெட்கப்பட வேண்டாம். ஹிந்துக்கள் பிறரிடமிருந்து பெற வேண்டியது கொஞ்சம் உண்டாயினும், உலகில் வேறெந்த நாட்டாரையும்விட அவர்களிடம் கொடுப்பதற் கதிகமிருக்கிற தென்பதை நினைவில் வையுங்கள்.

***

பெற்றோர்கள், தங்கள் பிள்ளைகள் முப்பதாண்டு பிரமசரியம் காத்த பின்னரே அவர்களுக்குக் கலியாணம் செய்து வைக்கவேண்டும். அதுபோன்றே பெண்களும் பிரமசரியங் காத்தல் அவசியம். அக்...

காலத்தில் அவர்களுக்குப் பெற்றோர்களால் கல்வி யளிக்கப்பட வேண்டும்.

***

இந்தியாவின் பெண்கள் சீதையின் அடிச்சுவடுகளைப் பின்பற்றியே முன்னேற வேண்டும். வேறு வழி கிடையாது.

***

மற்றவைகளுடன், அவர்கள் வீரமும் வலிமையும் கூடப் பெற வேண்டும். இந்நாளில் அவர்கள் தற்காப்பு முறைகள் தெரிந்து கொள்ளுதலும் அவசியமாகிவிட்டது.

***

நமது ஸ்திரீகளைத் தற்கால நாகரிகத்தில் பழக்குவதற்குச் செய்யப்படும் எந்த முயற்சியாயினும், அது சீதையின் இலட்சியத்திலிருந்து அவர்களை அகற்றிக் கொண்டு போவதாயிருந்தால், உடனே தோல்வியடைதல் நிச்சயம். இதைப் பிரதிதினமும் நாம் பார்க்கிறோம்.

***

உங்கள் பெண்மக்களின் நிலைமையை உங்களால் உயர்த்த முடியுமா? முடியுமென்றால், வருங்காலத்தில் நீங்கள் க்ஷேம மடைவீர்க ளென்று நம்புதற் கிடமுண்டு. இன்றேல் இப்போதுள்ள கீழ் நிலையிலேயே இருக்கவேண்டியதுதான்.

***

உண்மையான சக்தி உபாசகன் யார் என்று உங்களுக்குத் தெரியுமா? இவ் வுலகத்தில் ஆண்டவன் சர்வவியாபியான சக்தியா யுள்ளான் என்பதையறிந்து, பெண்மக்களிடத்தே அந்த சக்தியின் வெளித்தோற்றத்தைக் காண்பவனேயாவான்.

# 7. சாதிப் பிரச்னை

## சமூகத்திற்கே சாதி - சமயத்திற்கு அன்று

சமயத்துறையில் சாதி என்பது கிடையாது. சாதி என்பது ஒரு சமூக ஏற்பாடேயாகும். மிக உயர்ந்த சாதியைச் சேர்ந்தவனும், மிகத் தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவனும் இந்நாட்டில் சந்நியாசி யாகலாம். அப்போது இரண்டு சாதியும் சமமாகின்றன.



சாதி முதலிய நமது சமூக ஏற்பாடுகள் சமயத் தொடர்புடையனவாக வெளிக்குத் தோன்றிய போதிலும், உண்மையில் அவை அத்தகையன வல்ல. நம்மை ஒரு தனி சமூகமாகக் காப்பாற்றி வருவதற்கு அவ் வேற்பாடுகள் அவசியமா யிருந்து வந்திருக்கின்றன. தற்காப்புக்கு அவசியம் இல்லை யாகும்போது அவை இயற்கை மரணமடைந்து மறையும்.



கௌதம புத்தர் முதல் ராம் மோஹன் ராய் வரையில் (சீர்திருத்தக்காரர்) எல்லாரும் ஒரு தவறு செய்திருக்கிறார்கள். அவர்கள் சாதியை சமய ஸ்தாபனமாகக்கொண்டு சாதி, சமயம் எல்லாவற்றையும் சேர்த்து அழித்துவிட முயன்றார்கள். எனவே அவர்கள் அடைந்தது தோல்வியேயாகும். புரோகிதர்கள் என்ன பிதற்றினாலும் சரியே, சாதி என்பது ஒரு சமூக ஏற்பாடே என்பதில் சந்தேகமில்லை. அந்த ஸ்தாபனம் தன்னுடைய வேலையைச் செய்த பின்னர் இப்போது அழுகி நாற்றமெடுத்திருக்கிறது. இந்திய ஆகாய வெளியில் அந்நாற்றம் நிறைந்துளது.

சாதி ஏற்பாடு வேதாந்த மதத்துக்கு விரோத மானது. சாதி என்பது ஒரு சமூக வழக்கமே யல்லாது வேறில்லை. நமது பெரிய ஆசாரியர்கள் எல்லாரும் அதைத் தகர்க்க முயன்றிருக்கிறார்கள். புத்தர் காலத்திலிருந்து சாதிக்கு விரோதமாக அநேகர் பிரசாரம் செய்து வந்தார்கள். ஆனால் ஒவ்வொரு முறையிலும் அது வலிமை பெற்று வந்ததே யன்றி வேறு பயனில்லை. இந்தியாவின் அரசியல் ஸ்தாபனங்களிலிருந்து வளர்ச்சி பெற்றதே சாதியாகும். அதைப் பரம்பரையான தொழிற்சங்க முறை என்று சொல்லலாம். ஐரோப்பாவுடன் நேர்ந்த தொழிற் போட்டியானது, எந்த போதனையையும் விட, சாதியை அதிகம் தகர்த்திருக்கிறது.

***

## சாதி ஏற்பாட்டின் உட்கருத்து

ஐரோப்பிய நாகரிகத்திற்குரிய சாதனம் பலாத்காரமாகும். ஆரிய நாகரிகமோ வர்ண தர்மத்தை அடிப்படையாகக் கொண்டது. இந்த வர்ணப் பிரிவினை, நாகரிகமென்னும் உச்சிக்கு ஜனங்களை அழைத்துச் செல்லும் படிக்கட்டாகும். ஒருவனுடைய கல்வியும்,,அறிவுப் பயிற்சியும் அதிகமாக ஆக, அவன் அந்தப் படிக்கட்டின் மூலமாய் மேலே மேலே ஏறிக்கொண்டிருக்கிறான். ஐரோப்பிய நாகரிகத்தில் பலசாலிகளுக்கே வெற்றி; பலவீனர்கள் அழிந்து போகவேண்டியதுதான். ஆனால் பாரத தேசத்திலோ ஒவ்வொரு சமூக விதியும் பலவீனர்களைப் பாதுகாப்பதையே நோக்கமாகக் கொண்டதாகும்.

சாதி என்பது நல்ல ஏற்பாடு தான். ஆனால் உண்மையில் சாதி என்றால் என்னவென்று லட்சத்தில் ஒருவர் கூட அறிந்து கொள்வதில்லை. உலகில் சாதி இல்லாத தேசமே யில்லை. இந்தியாவில் நாம் சாதி என்னும் கீழ்ப் படியில் தொடங்கி சாதியற்ற மேல் நிலையை அடைகிறோம். சாதி என்பது இந்தத் தத்துவத்தையே அடிப்படையாகக் கொண்டதாகும். இந்தியாவில், பிராமணன் மக்கட் குலத்தின் இலக்கியமாவான். ஒவ்வொருவனையும் பிராமணனாக்குவது சாதி ஏற்பாட்டின் நோக்கமாகும். இந்திய சரித்திரத்தைப் படித்தால் கீழ்வகுப்பாரை மேலே கொண்டுவர எப்போதும் முயற்சிகள் செய்யப் பட்டுவந்திருப்பதைக் காண்பீர்கள். பல வகுப்புகள் கைதூக்கி விடப்பட்டிருக்கின்றன. மற்றும் பல வகுப்புகளும் மேலே வந்து முடிவில் எல்லாரும் பிராமணர்களாவார்கள். இதுவே சாதி ஏற்பாட்டின் நோக்கம். யாரையும் கீழே கொண்டுவராமல் எல்லாரையும் நாம் மேலே தூக்கிவிடவேண்டும். இதைப் பெரிதும் பிராமணர்களே செய்தாகவேண்டும். ஏனெனில், உயர் குலத்தவரின் கடமை தங்கள் 'தனி உயர்'வுக்குத் தாங்களே குழி தோண்டிக் கொள்ளுதல், அதாவது மற்றவர்களையும் தங்களுக்குச் சமமாக உயர்த்துதலே யாகும். இதை எவ்வளவு விரைவில் செய்கிறார்களோ அவ்வளவுக்கு நன்மை.

***

ஆத்ம சாதனத்தையும் துறவு நெறியையும் மேற்கொண்ட பிராமணன் நமது இலக்கியமாவான். பிராமண இலட்சியம் என்றால் என்ன? உலகப்பற்று அறவே நீங்கி உண்மை ஞானம் குடிகொண்டுள்ள பிரம்மணிய

இலட்சியத்தையே நான் குறிப்பிடுகிறேன். இதுவே ஹிந்து சமூகத்தின் இலட்சியமாகும்.

***

உலக முழுவதிலும் ஆரம்பத்தில் பிராமணர் களே யிருந்தார்களென்றும், அவர்கள் இழிவடையத் தொடங்கியபோது பற்பல சாதிகளாகப் பிரிந்தார்க ளென்றும், மீண்டும் கிருத யுக ஆரம்பத்தில் எல்லா ரும் பிராமணர்க ளாவார்களென்றும் மகாபாரதத்தில் படிக்கிறோம். ஆதலின் சாதிப் பிரச்னையைத் தீர்த்து வைப்பதற்கு வழி, ஏற்கனவே மேலேயுள்ளவர்களைக் கீழே இழுப்பதன்று; உண்ணல் குடித்தல் விஷயங் களில் மூளை கெட்டுத் தடுமாறுவது மன்று; அதிக சுகாநுபவங்களுக்காக நமது கட்டுக்களை மீறி நடப் பதுமன்று; நம்மில் ஒவ்வொருவரும் வேதாந்த சம யத்தின் கட்டளைகளை நிறைவேற்றிப் பாரமார்த்திக வாழ்வு எய்தலும், உண்மைப் பிராமண ராதலுமே வழியாகும்.

***

உங்கள் எல்லாருக்கும் விதிக்கப்பட்டுள்ள கட் டளை ஒன்றுதான். அதாவது நீங்கள் அனைவரும் இடையில் நில்லாமல் முன்னேறிக் கொண்டே யிருத் தல் வேண்டும். மிக உயர் நிலையிலுள்ளவனிலிருந்து, மிகத் தாழ்ந்துள்ள பறையன் வரைக்கும் இந்நாட்டில் எல்லாரும் முயன்று உண்மைப் பிராமணர் ஆதல் வேண்டும்.

***

பின்னர் நாளடைவில் ஏற்பட்ட ஸ்மிருதிகளில், சிறப்பாக இக்காலத்திற்கு முழு அதிகாரம் உள்ள ஸ்மிருதிகளில், நாம் காண்பதென்ன? சூத்திரர்கள்

பிராமணர்களுடைய வழக்க பழக்கங்களைக் கைக்கொண்டால் அவர்கள் நன்றே செய்கிறார்கள்; இவ்வழியில் அவர்களுக்கு ஊக்கமளிக்கவேண்டும் என்று கூறப்படுவதைக் காண்கிறோம்.....எல்லாச் சாதிகளும் மெதுவாக, நிதானமாக, மேலே வரவேண்டுமென்பதே நோக்கமென்று பிரத்யட்சமாகத் தெரியவருகிறது. ஆயிரக்கணக்கான சாதிகள் இருக்கின்றன. அவற்றுள் சில பிரம்மண்ய பதவி அடைந்தும் இருக்கின்றன.

***

பிராமணனுடைய மகன் ஒவ்வொருவனும் பிராமணனாகவே யிருத்தல் வேண்டுமென்னும் கட்டாயமில்லை. பிராமணனுடைய மகன் பிராமணன் ஆவது பெரிதும் சாத்தியமாயினும், அவன் பிராமணனாகாமலும் போதல் கூடும்....பிராமண சாதியும், பிரம்மண்ய குணங்களும் முற்றும் வேறானவை....சத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்கள் இருப்பதுபோல் ஒருவனை பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் என்று குறிப்பிடும் குணங்கள் இருக்கின்றன. ...எனவே, ஒருவன் ஒரு சாதியிலிருந்து மற்றொரு சாதிக்கு மாறுதல் முற்றிலும் சாத்தியமாகும்; அது இயற்கையுமாகும். இல்லாவிடில் விசுவாமித்திரர் பிராமணராகவும், பரசுராமர் க்ஷத்திரியராகவும் எவ்வாறு ஆகியிருக்க முடியும்?

***

## சாதி நல்லது ; உரிமைதான் கேட்டது

சாதி என்பது நல்ல ஏற்பாடே. சமூக வாழ்க்கையை ஒழுங்குபடுத்துவதற்கு அது ஒன்றே இயற்கை வழி. எந்த சமூகத்திலும் மனிதர்கள்

தனித்தனிக் கூட்டமாகச் சேர்ந்தே யாக வேண்டும். இந்த இயற்கை நியதியை மாற்ற முடியாது. நீங்கள் எங்கே போனாலும் சாதி இருப்பதைக் காணலாம்.

* * *

சாதி அடியோடு போக வேண்டியதில்லை. அதை அடிக்கடி சீர்திருத்தி அமைத்தலே அவசியமாகும். அந்தப் பழைய ஏற்பாட்டில் இருநூறாயிரம் புதிய ஏற்பாடுகளை அமைப்பதற்கு வேண்டிய ஜீவசக்தி இருக்கிறது. சாதியை அடியோடு ஒழிக்க விரும்புதல் அறிவீனமாகும்.

* * *

நம்மை ஒரு தனிச்சமூகமாகக் காப்பாற்றுவதற்கு இந்த ஏற்பாடுகள் அவசியமா யிருந்திருக்கின்றன. தற்காப்புக்கு இந்த அவசியம் இல்லாமற்போகும் போது அவை இயற்கை மரண மடையும்.

* * *

ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் உள்ள சாதி ஏற்பாட்டைக் காட்டிலும் இந்திய சாதி ஏற்பாடு சிறந்ததாகும். அது முற்றிலும் நல்லது என்று நான் சொல்லவில்லை. சாதி இல்லாவிட்டால் இப்போது உங்கள் கதி என்னவாயிருக்கும்? உங்கள் கல்வியும், பிறவும் என்ன கதி அடைந்திருக்கும்?

* * *

தனி வகுப்புகளாகப் பிரிந்தமைதல் சமூகத்தின் இயற்கை. விசேஷ உரிமைகளே தொலைதல் வேண்டும். சாதி என்பது ஓர் இயற்கை நியதி. சமூகவாழ்வில் நான் ஒரு கடமையைச் செய்கிறேன்; நீ மற்றொரு கடமையைச் செய்கிறாய். நீ நாட்டை ஆள்கிறாய்; நான் பழைய செருப்புத் தைக்கிறேன். இதனாலேயே

நீ என்னைவிடப் பெரியவனாவதெங்ஙனம்? நான் நாடாள முடியாதெனில், நீ செருப்புத்தைக்க முடியுமா?.... நான் செருப்புத் தைப்பதில் கெட்டிக்காரன்; நீ வேதம் ஓதுவதில் சமர்த்தன். அதனால் நீ என் தலை மீதேறி மிதிக்க வேண்டுமென்பதென்ன ?



ஆண்டவன் மக்கட்குலத்துக்கு அளித்த மிகச் சிறந்த சமூக ஸ்தாபனங்களில் சாதி ஏற்பாடும் ஒன்றென்பதாக நாங்கள் நம்புகிறோம். விலக்கமுடியாத பல குறைபாடுகளும், அன்னியநாட்டாரின் கொடுமைகளும், எல்லாவற்றிற்கும் மேலாக பிராமணர் என்னும் பெயருக்குத் தகுதியற்ற பிராமணர் பலரின் மகத்தான அஞ்ஞானமும் கர்வமும் அவ்வுயரிய ஸ்தாபனமானது உரிய பயனளியா வண்ணம் செய்திருக்கின்றன. அங்ஙனமிருப்பினும், அந்த ஸ்தாபனத்தினால் பாரத நாட்டுக்கு ஆச்சரியகரமான நன்மைகள் விளைந்திருக்கின்றன வென்றும், இனியும் இந்திய சமூகத்தை அதன் இலட்சியத்துக்குக் கொண்டு சேர்க்கப் போவது அந்த ஸ்தாபனமே யென்றும் நாங்கள் நம்புகிறோம்.



தற்கால சாதி வேற்றுமையானது இந்தியாவின் முன்னேற்றத்துக்கு ஒரு தடைகல்லாகும். அது வாழ்வைக் குறுக்குகின்றது; கட்டுப்படுத்துகின்றது; பிரிவினை செய்கின்றது. அறிவு வெள்ளத்தின் முன்பாக அது விழுந்து மாயும்.



தற்காலப் போட்டியின் காரணமாக, சாதி எவ்வளவு விரைவில் மறைந்து வருகிறதென்று பாருங்கள். இப்போது அதைக் கொல்ல மதம் எதுவும் தேவை

யில்லை. வட இந்தியாவில் கடைக்கார பிராமணனும், செருப்புத் தைக்கும் பிராமணனும், சாராயம் காய்ச்சும் பிராமணனும் சர்வ சாதாரணமா யிருக்கிறார்கள். இந்நிலைமைக்குக் காரணம் என்ன? வாழ்க்கைப் போட்டியே யாகும்.

***

தற்போதைய அரசாங்கத்தின்கீழ், எவனும் தன் ஜீவனோபாயத்துக்காக எந்தத் தொழிலும் செய்யலாம். தடை எதுவும் கிடையாது. எனவே, வாழ்க்கைப் போட்டி பலமாகி விட்டது. இதன் பயனாக, ஆயிரக்கணக்கானவர்கள் அடியில் கிடந்து உழலாமல், தங்கள் ஆற்றல்கள் அனைத்தையும் பயன்படுத்தி மேனிலைக்கு வந்திருக்கிறார்கள்.

***

தனி உரிமைகளும், விசேஷ பாத்தியங்களும் கோரும் காலம் என்றென்றைக்கும் இத்தேசத்திலிருந்து மலையேறி விட்டது. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியினால் விளைந்துள்ள பெரு நன்மைகளில் இது ஒன்றாகும்.

***

## சாதிப் பிரச்னையைத் தீர்க்கும் உபாயம்

சாதிச்சண்டை போடுவதில் பயனில்லை. அதனால் நன்மை என்ன? அச்சண்டை நம்மை இன்னும் அதிகமாகப் பிரிக்கும்; இன்னும் அதிகமாக பலவீனப் படுத்தும்; இன்னும் அதிகமாகத் தாழ்த்தும்.

***

சாதிப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு வழி மேலே யுள்ளவர்களைக் கீழே இழுப்பதன்று; கீழே யுள்ளவர்

களை மேனுள்ளவர்களின் நிலைக்கு உயர்த்துவதே யாகும்.

***

நமது இலட்சியத்தின் மேல்படியில் பிராமணன் ; கிழ்ப்படியில் சண்டாளன். சண்டாளனை பிராமணனுடைய நிலைக்கு உயர்த்துவதே நமது வேலை.

***

உயர் வகுப்பாரின் கடமை தங்களுடைய விசேஷ உரிமைகளைத் தாங்களே தியாகம் செய்வதாகும். இது எவ்வளவு விரைவில் நடக்கிறதோ அவ்வளவுக்கு நன்மை. தாமதம் ஆக ஆக அவை அதிகமாய்க் கெட்டுக் கொடிய மரணம் அடைகின்றன.

***

தான் பிராமணன் என்பதாக உரிமை பாராட்டிக் கொள்ளும் ஒவ்வொருவனும் அவ்வுரிமையை இரண்டு வழிகளில் நிரூபிக்க வேண்டும். முதலாவது தன் பாரமார்த்திக மேன்மையை விளங்கச் செய்தல்; இரண்டாவது மற்றவர்களையும் தன் நிலைக்கு உயர்த்தல். ஆனல் தற்போது அவர்களில் பலர் பொய்யான பிறவிக் கர்வத்தையே பேணி வருவதாகக் காணப்படுகிறது. பிராமணர்களே! எச்சரிக்கை! இது சாவின் அறிகுறியாகும். விழித்தெழுங்கள். உங்களைச் சுற்றியுள்ள பிராமணரல்லாதாரை உயர்த்துவதின் மூலம் உங்களுடைய மனிதத் தன்மையையும், பிரம்மண்யத்தையும் நிரூபியுங்கள். ஆனல் இதை எஜமானன் என்ற இறுமாப்புடன், குருட்டு நம்பிக்கை கலந்த கர்வப்புரையுடன் செய்ய வேண்டாம். ஊழியன் என்ற தாழ்மை உள்ளத்துடன் செய்யுங்கள்.

பிராமணர்களே நான் வேண்டிக்கொள்வதாவது : "உங்களுக்குத் தெரிந்திருப்பதைப் பிறருக்குக் கற்பியுங்கள். பல நூற்றாண்டு காலமாக நீங்கள் சேர்த்து வைத்திருக்கும் ஞானச் செல்வத்தை எல்லாருக்கும் அளியுங்கள். இவ்வாறு இந்திய ஜாதியை உயர்த்தப் பெருமுயற்சி செய்யுங்கள்" என்பதே. உண்மைப் பிராம்மண்யம் எதுவென்பதை நினைவு கூர்ந்திருத்தல் பிராமணர்களின் கடமையாகும். பிராமணனிடம் 'தர்ம பொக்கிஷம்' இருப்பதினாலேயே அவனுக்கு இவ்வளவு சிறப்புகளும், விசேஷ உரிமைகளும் அளிக்கப்பட்டுள்ளன என்று மனு சொல்கிறார். பிராமணன் அப்பொக்கிஷத்தைத் திறந்து அதிலுள்ள செல்வங்களே உலகிற்கெல்லாம் பகிர்ந்து கொடுக்க வேண்டும்.

***

பாம்பு தான் கடித்த மனிதன் உடலிலிருந்து தன் விஷத்தைத் திரும்ப உறிஞ்சி விட்டால் அம்மனிதன் பிழைத்துக் கொள்வானென்று வங்காளத்தில் ஒரு குருட்டு நம்பிக்கை உண்டு. அவ்வாறே பிராமணன் தன்னால் விளைந்த தீமையைத் தானே நிவர்த்தி செய்ய வேண்டும்.

***

இந்தியாவிலுள்ள மற்றச் சமூகங்களின் கதிமோக்ஷத்திற்காக உழைப்பது பிராமணனின் கடமையாகும்.

***

பிராமணரல்லாதாருக்கெல்லாம் நான் கூறுவதாவது : "பொறுங்கள் ; அவசரப்பட வேண்டாம். பிராமணனுடன் சண்டையிட எங்கே சந்தர்ப்பமென்று காத்திராதீர்கள். நீங்கள் கஷ்டப்படுவதற்குக் கார

ணம் உங்கள் தவறேயாகும். பாரமார்த்திகத் துறையையும், ஸம்ஸ்கிருதக் கல்வியையும் அலட்சியம் செய்யும்படி உங்களுக்கு யார் சொன்னார்கள்? இவ்வளவு காலம் என்ன செய்து கொண்டிருந்திர்கள்? இத்தனை நாள் அசட்டையா யிருந்துவிட்டு, இப்போது மற்றவர்கள் உங்களைவிட அதிக மூளையும், ஊக்கமும், சாமர்த்தியமும் உள்ளவர்களா யிருப்பது குறித்து எரிச்சலடைவதில் யாது பயன்? பயனற்ற விவாதங்களிலும், பத்திரிகைச் சண்டைகளிலும் உங்கள் சக்திகளை வீணுக்குவதற்குப் பதிலாக, உங்கள் சொந்த வீடுகளில் வீணான போர் நடத்திப் பாவந்தேடிக் கொள்வதற்குப் பதிலாக, பிராமணன் பெற்றிருக்கும் அறிவுச் செல்வத்தையடைவதில் உங்கள் எல்லா சக்திகளையும் பயன்படுத்துங்கள். உபாயம் அதுவேயாகும்.''

***

தாழ்ந்த சாதியார்களுக்கெல்லாம் நான் சொல்வதாவது: ''உங்களுக்கு ஒரே பாதுகாப்பு, உங்களுடைய நிலையை உயர்த்திக் கொள்வதற்கு ஒரே வழி சம்ஸ்கிருதம் படித்தலேயாகும். உயர் சாதியார்களிடத்து எரிந்து விழுதலும், அவர்களுடன் சண்டை போடுதலும் பயனளியா. அவ்வழியினால் யாருக்கும் நன்மையில்லை. அதனால் துரதிர்ஷ்டவசமாக ஏற்கனவே பிரிவினை அதிகமாயுள்ள நமது சமூகத்தில் நாளுக்கு நாள் அதிக வேற்றுமையே ஏற்படும். உயர் சாதிகளின் வலிமையெல்லாம் அவர்களுடைய கல்வியும், பயிற்சியுமேயாம். நீங்களும் அவற்றைக் கைக்கொள்வதொன்றே சாதி சமத்வத்தை ஏற்படுத்தும் வழியாகும்.''

நீங்கள் ஏன் சம்ஸ்கிருத பண்டிதர்கள் ஆகக் கூடாது? இந்தியாவிலுள்ள எல்லா சாதிகளுக்கும் சம்ஸ்கிருதக் கல்வியளிப்பதற்காக நீங்கள் ஏன் கோடிக்கணக்கான பணம் செலவு செய்யலாகாது?.... இவைகளை நீங்கள் செய்து முடிக்கும் போது பிராமணனுடன் சமமாகிறீர்கள். இந்தியாவில் செல்வாக்குப் பெறும் இரகசியம் அதுவேயாகும். இந்தியாவில் ஸம்ஸ்கிருதமும் மரியாதையும் பிரிக்க முடியாதவையாயிருக்கின்றன. நீங்கள் ஸம்ஸ்கிருதக் கல்வி பெற்றவுடன் உங்களுக்கு விரோதமாய் யாரும் எதுவும் சொல்லத் துணியார்கள்.

## 8. இந்திய நாகரிகம் - அதைப் பாதுகாத்து வளர்த்தல்

அருவியொன்று ஹிமாலயத்தில் உற்பத்தியாகி யுக யுகாந்தரமாக ஓடிக்கொண்டிருக்கிறது. அது ஓடத் தொடங்கியது எப்போதென்று யாருக்கும் தெரியாது. அந்த அருவியைத் தடுத்துத் திருப்பி அது உற்பத்தியான இடத்துக்குக் கொண்டு போக முடியுமெனக் கருதுகிறீர்களா? அம்முயற்சி சாத்தியமானுல்கூட நீங்கள் ஐரோப்பிய நாகரிகத்தை மேற்கொள்ளுதல் இயலாத காரியமாகும். ஐரோப்பிய நாகரிகம் பிறந்து வளரத் தொடங்கிச் சில நூற்றுண்டு காலமே ஆகிறது. அந்நாகரிகத்தையே மேனுட்டார் துறக்க இயலவில்லையென்றுல், எவ்வளவோ நூற்றுண்டு காலமாக ஒளிவீசித் திகழ்ந்து வரும் உங்கள் நாகரிகத்தை நீங்கள் எங்ஙனம் கைவிட இயலும்?

இந்தியாவில் நமது முன்னேற்ற மார்க்கத்தில் குறுக்கிடும் இரண்டு பெரிய தடைகள் இருக்கின்றன. ஒன்று பழைய குருட்டு வைதிகம்; மற்றொன்று நவீன ஐரோப்பிய நாகரிகம். என்னைக் கேட்டால் இவ்விரண்டினுள் பழைய குருட்டு வைதிகமே மேல் என்பேன். பழைய வைதிகன் ஒருவன் அறியாமை யில் மூழ்கியவனாயிருக்கலாம்; பயிற்சியற்றவனா யிருக் கலாம். ஆனாலும் அவன் ஆண் மகன்; அவனுக்கு நம்பிக்கையுண்டு; பலமுண்டு; அவன் தன் வலிமை கொண்டு தான் நிற்கிறான். ஐரோப்பிய நாகரிக வயப் பட்ட மனிதனோ முதுகெலும்பற்றவன். அவன் பற் பல இடங்களிலிருந்தும் பகுத்தறிவின்றிப் பொறுக் கிய கருத்துக்களின் கலப்புப் பிண்டமாவான். இக் கருத்துக்களை அவன் ஜீரணித்துக் கொள்வதில்லை. அவற்றின் சாராம்சத்தைக் கிரஹிப்பதில்லை. முரண் பட்ட அக்கருத்துக்களினால் அவன் உள்ளம் அமைதி யின்றி அலைக்கப் பெறுகின்றது.

***

ஐரோப்பிய நாகரிக வயப்பட்ட இந்தியன் நமது பழக்க வழக்கங்களில் சிலவற்றைத் தீமையென்று சொல்கிறான். இதற்கு அவன் கூறும் காரணம் யாது? ஐரோப்பியர்கள் அப்படிச் சொல்கிறார்கள் என்பது தான்! நான் இதற்கு ஒருப்படேன். இருந்தாலும், இறந்தாலும், நமது சொந்த பலங்கொண்டு நாம் நிற்றல் வேண்டும்.

***

இந்த நிதானமில்லாத பிராணிகள் (ஐரோப்பிய நாகரிகத்திலாழ்ந்த இந்தியர்கள்) இன்னும் தங்களுக் கென்று தனித்த நிலை ஒன்று எய்தவில்லை. அவர்களை

என்னவென்று நாம் அழைப்பது? ஆண்களென்று, பெண்களென்று, விலங்குகளென்று?

***

நன்மைக்கோ, தீமைக்கோ, நமது உயிர் நிலை நமது மதத்தில் அமைந்திருக்கிறது. அதை உங்களால் மாற்றமுடியாது. மதத்தை அழித்துவிட்டு அதனிடத்திற்கு வேறொன்றைக் கொண்டு வரவும் முடியாது. பெரிதாக வளர்ந்து விட்ட மரம் ஒன்றை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்தில் பெயர்த்து நட்டு அங்கே உடனே வேர் கொள்ளச் செய்ய முடியுமா?

***

உண்ணலும், குடித்தலும், களியாட்டயர்தலுமே மனிதவாழ்க்கையின் இலட்சியம் என்று இந்தியாவில் ஒருவன் போதனை செய்வானாயின்,—இந்தச் சட உலகையே ஆண்டவனாக்க முயல்வானாயின்,—அவன் உடனே பொய்யனாகிறான். இப்புண்ணிய பூமியில் அவனுக்கு இடமில்லை. இந்திய மக்கள் அவனுக்குச் செவி சாய்க்க ஒருப்படார்கள்.

***

மற்ற நாட்டாரின் ஸ்தாபனங்களை நான் நிந்திக்கவில்லை. அந்த ஸ்தாபனங்கள் அவர்களுக்கு நல்லவை; ஆனால் நமக்கு நல்லவையல்ல. அவர்களுக்கு உணவாயிருப்பது நமக்கு விஷமாகலாம். நாம் கற்றுக்கொள்ள வேண்டிய முதற்பாடம் இதுவாகும்.

***

இந்தியாவை இங்கிலாந்தைப் போல் ஆக்கிவிடப் புத்தியுள்ள மனிதன் எவனும் கருதமாட்டான். எண்ணத்தின் வெளித்தோற்றமாக அமைவதே உடம்பு. அவ்வாறே சமூகவாழ்வும் தேசிய உள்ளத்தின்

வெளித் தோற்றமேயாகும். இந்தியாவில் ஆயிரக் கணக்கான ஆண்டுகளின் சிந்தனையினுல் சமூகவாழ்வு அமைந்திருக்கிறது. எனவே இந்தியாவை ஐரோப்பிய நாகரிக வயப்படுத்தல் இயலாத காரியம்; அதற்காக முயலுதல் அறிவீனம்.

***

மேனுட்டார், நம்மினின்றும் வேருன சாஸ்திரங்களும், ஸ்தாபனங்களும், பாரம்பரை தர்மங்களும் உடையவர்கள். அவற்றிற் கிணங்க அவர்கள் தற்போது ஒருவகை வாழ்க்கை முறையைப் பெற்றிருக்கின்றனர். நமக்குச் சொந்தமான பாரம்பரை தர்மம் இருக்கிறது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகச் செய்த கர்மம் நமக்குப் பின்னுல் இருக்கிறது. எனவே நாம் நமது சொந்த வழியிலேயே செல்லக் கூடும். அதுவே இயற்கையாகும்.

***

நமது முன்னேற்ற மார்க்கத்தில் பல அபாயங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்று, உலகில் நம்மைத் தவிர வேறு ஜனங்கள் இல்லையென்றெண்ணிக் கண்ணை மூடிக் கொள்வதாகும். பாரத நாட்டினிடம் எனக்கு அளவற்ற அன்புண்டு; நமது முன்னேர்களை நான் போற்றுகிறேன்; தேசபக்தியில் நான் குறைந்தவனல்லன். ஆயினும் மற்ற நாட்டாரிடமிருந்து நாம் கற்றுக் கொள்ள வேண்டிய விஷயங்கள் பல உண்டென்பதை நான் ஒப்புக் கொண்டே தீரவேண்டும். எனவே எல்லாருடைய காலடியிலும் உட்கார்ந்து உபதேசம் பெற நாம் சித்தமாயிருக்கவேண்டும். ஒவ்வொருவரிடமிருந்தும் நாம் கற்றுக் கொள்வதற்குரிய சிறந்த பாடங்கள் உண்டு.

மேனாட்டிலிருந்து நாம் கற்றுக் கொள்ள வேண்டிய விஷயங்கள் பல இருக்கின்றன. மேனாட்டாரின் கலைகளையும், பூதபௌதிக சாஸ்திரங்களையும் அவர்களிடமிருந்து நாம் கற்றறிதல் வேண்டும். புற உலகைப் பற்றிய விஷயங்களை யெல்லாம் அவர்களிட மிருந்து நாம் தெரிந்துகொள்ள வேண்டும். ஆனால் சமயத்திற்கும், பாரமார்த்திக ஞானத்திற்கும் அவர்கள் நம்மிடம் வரவேண்டியவர்க ளாவர்.

* * *

வெளி உலகத்துடன் தொடர்பின்றி நாம் உயிர் வாழ முடியாது. அப்படி வாழ முடியும் என்று எண்ணியது நமது மடமையாகும். அதற்குரிய தண்டனையை ஓராயிரம் ஆண்டு அடிமை வாழ்வு வாழ்ந்து நாம் அநுபவித்து விட்டோம். நமது நிலையைப் பிறதேசத்தாரின் நிலையுடன் ஒப்பிட்டுப் பார்க்க நாம் வெளியே போகாததும், நம்மைச் சுற்றிலும் நடந்து வந்த காரியங்களைக் கவனியாததும் இந்தியர் தாழ்வடைந்ததற்கு ஒரு பெரிய காரணமாகும்..... இந்தியர்கள் இந்தியாவை விட்டு வெளியே போகக்கூடா தென்பது போன்ற மூடக் கொள்கைகள் குழந்தைத்தன மானவை. அவற்றை மண்டையில் அடித்துவிட வேண்டும். எவ்வளவுக் கெவ்வளவு நீங்கள் வெளியே சென்று பிறநாட்டாரிடையே பிரயாணம் செய்கிறீர்களோ அவ்வளவுக்கு உங்களுக்கும் உங்கள் நாட்டுக்கும் நன்மையுண்டு. பல நூற்றுண்டுகளுக்கு முன்பிருந்தே நீங்கள் அவ்வாறு செய்து வந்திருந்தால் இன்று இந்நிலையில் இருக்க மாட்டீர்கள். இந்தியாவை ஆள விரும்பிய ஒவ்வொரு நாட்டாருக்கும் அடிமையாகி யிருக்க மாட்டீர்கள்.

என் மகனே! எந்த மனிதனாதல், எந்த தேச மாதல் பிறரைப் பகைத்து உயிர் வாழமுடியாது. என்றைய தினம் இந்நாட்டில் மிலேச்சன் என்னும் வார்த்தையைச் சிருஷ்டித்தார்களோ, என்றைய தினம் பிறருடன் கலந்து பழகுவதை நிறுத்தினார்களோ அன்றே இந்தியாவுக்கு அழிவு காலம் தோன்றிற்று. எனவே, எச்சரிக்கை! அத்தகைய கொள்கைகளை வளர்த்தல் வேண்டாம். வாயினால் வேதாந்தம் பேசுதல் எளிது. ஆனால் வேதாந்தத்தின் மிகச் சிறு போதனைகளையும் செயலில் கொணருதல் மிக அரிது.

***

நாம் யாத்திரை செய்யவேண்டும். வெளிநாடுகளுக்குச் செல்லவேண்டும். மற்ற நாடுகளில் சமூக வாழ்வு எவ்வாறு நடைபெறுகிறதென்று பார்க்கவேண்டும். பிறநாட்டாரின் மனப்போக்கைக் கவனித்து அவர்களுடைய சிந்தனைகளுடன் நாம் சுதந்திரமான தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டும். அப்போதுதான் நாம் மீண்டும் ஒரு பெரிய ஜாதியாராக உயிர்த்தெழல் முடியும்.

***

உங்களுடைய பலங்கொண்டு நில்லுங்கள்; ஆனால் கூடுமானவரை வெளியிலிருந்து வலிமைபெற்று அதை உங்களுடையதாக்கிக் கொள்ளுங்கள். வெளி நாட்டார் ஒவ்வொருவரிடமிருந்தும் உங்களுக்கு உபயோகமான விஷயங்களைக் கற்றுக்கொள்ளுங்கள். ஆனால் ஹிந்துக்களாகிய நமக்கு நமது தேசிய இலட்சியங்களே முதன்மையானவை; மற்றவையெல்லாம் இரண்டாந்தரம், மூன்றாந்தரமேயாகும் என்பதை நினைவு கூருங்கள்.

---

## நான்காம் அத்தியாயம்

# வெளிநாட்டில் ஊழியம்

இவ்வுலகம் தொழில் பிரிவினை என்னும் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு அமைந்திருக்கிறது. ஒருவனிடமே எல்லாப் பொருள்களும் இருக்கும் என்று எண்ணுதல் வீணாகும். எனினும் நாம் எவ்வளவு குழந்தைப் புத்தி யுள்ளவர்களா யிருக்கிறோம்? குழந்தை தன் அறியாமையால் இப்புவியில் விரும்பத்தக்க பொருள் தன்னிடமுள்ள பொம்மை ஒன்றே எனக் கருதுகிறது. அவ்வாறே இவ்வுலக அதிகாரம் மிகப்படைத்த ஒரு தேசத்தார், அவ் வதிகாரம் ஒன்றே விரும்பத்தக்க பொருளென்றும், முன்னேற்றம், நாகரிகம் என்பவை யெல்லாம் அதுதானென்றும் கருதுகிறார்கள். அவ்வதிகாரம் பெறாத, அதில் பற்றுமில்லாத வேறு ஜாதியார் இருப்பின் அவர்கள் உயிர் வாழ்வதற்கே தகுதியற்றவர்களென்றும், அவர்களுடைய வாணாள் வீண் என்றும் எண்ணுகிறார்கள்! இதற்கு மாறாக, வேறொரு ஜாதியார் வெறும் உலகாயத நாகரிகம் அணுவளவும் பயனற்றதென்று எண்ணுதல் கூடும். ஒருவன் இவ்வையத்திலுள்ள எல்லாச் செல்வங்களையும் பெற்றவனாயினும், பாரமார்த்திகச் செல்வம் மட்டும் பெறாதவனாயின் அவன் பாக்கியம் பெறாதவனே என்னும் வாக்கியம் கீழ்நாட்டில் எழுந்தது. இது கீழ் நாட்டு இயற்கை; முன்னது மேல் நாட்டு இயற்கை. இவ்விரண்டுக்கும் தனித் தனியே மேன்மையும், மகிமையும் உண்டு. இவ்விரண்டு இலட்சியங்களையும்

கலந்து சமரசப் படுத்தலே தற்போது செய்யவேண்டிய காரியமாகும். மேனாட்டுக்குப் புலனுலகம் எத்துணையளவு உண்மையோ அத்துணையளவு கீழ் நாட்டுக்கு ஆத்ம உலகம் உண்மையாகும்..... கீழ் நாட்டானைப் பகற்கனவு காண்பவனென்று மேனாட்டான் எண்ணுகிறான். அவ்வாறே மேனாட்டானைக் கனவு காண்பவனென்றும், இன்றிருந்து நாளை அழியக் கூடிய விளையாட்டுக் கருவிகளை சாசுவதமெனக் கருதி விளையாடுபவ னென்றும் கீழ் நாட்டான் நினைக்கிறான். இன்றோ நாளையோ விட்டுப் போகவேண்டிய ஒரு பிடி மண்ணுக்காக வயது வந்த ஸ்திரீ புருஷர்கள் இவ்வளவு பாடு படுகிறார்களே என்றெண்ணி அவன் நகையாடுகிறான். இவ்விருவரும் ஒருவரை யொருவர் கனவு காண்பவரென்று கருதுகிறார்கள். ஆனால் மக்கட் குலத்தின் முன்னேற்றத்துக்கு மேனாட்டு இலட்சியத்தைப் போல் கீழ் நாட்டு இலட்சியமும் அவசியமேயாகும். கீழ் நாட்டு இலட்சியமே அதிக அவசியமான தென்றும் நான் கருதுகிறேன்.

***

மேனாட்டார் பாரமார்த்திக உயர் ஞானத்தை அறிந்து கொள்வதற்கு நீண்ட காலமாக வேண்டும். பவுன் ஷில்லிங் பென்ஸே அவர்களுக்கு எல்லாமாகும். ஒரு மதமானது அவர்களுக்குப் பணம், சுகம், அழகு அல்லது தீர்க்காயுளை அளிக்குமானால் எல்லாரும் அதனிடம் ஓடுவார்கள்; இல்லாவிடில் அதன் அருகிலும் நெருங்க மாட்டார்கள்.

***

எவ்வித வளர்ச்சிக்கும் முதன்மையாக வேண்டுவது சுதந்திரம். உங்கள் முன்னோர்கள் ஆன்மாவுக்

குப் பூரண சுதந்திரமளித்தார்கள். அதன் பயனாக மதம் வளர்ச்சி பெற்றது. ஆனால் அவர்கள் உடலை எல்லாவகைப் பந்தங்களுக்கும் உட்படுத்தினார்கள். ஆதலின் சமூகம் வளரவில்லை. மேனாட்டில் இதற்கு நேர்மாறாக சமூகத் துறையில் எல்லாச் சுதந்திரமுமளித்து, சமயத் துறையில் சுதந்திரமே யில்லாமல் செய்யப்பட்டது.

* * *

மேனாடு சமூக முன்னேற்றத்தின் மூலமாகவே பாரமார்த்திக ஞானம் பெற விரும்புகிறது. வேறு வழியில் வரும் பாரமார்த்திகம் அதற்குத் தேவையில்லை. கீழ்நாடோ பாரமார்த்திக அபிவிருத்தியின் மூலமாகவே சமூக அதிகாரம் பெற விழைகிறது. வேறுவகையான சமூக முன்னேற்றம் அதற்கு வேண்டாம்.

* * *

இயந்திரங்கள் மானிடர்க்கு என்றும் மகிழ்ச்சி அளித்ததில்லை ; என்றும் மகிழ்ச்சி யளிக்கப் போவது மில்லை. அவை மகிழ்ச்சியளிக்கும் என்று நமக்குச் சொல்வோன் இயந்திரத்தில் இன்பமிருப்பதாகச் சொல்பவனாகிறான். உண்மையில், இன்பம் எப்போதும் நமது உள்ளத்தில் இருக்கிறது. எனவே மனதை அடக்கிய மனிதன் ஒருவனே உண்மை மகிழ்ச்சி யடைதல் கூடும். மற்றவர்கள் அடைய முடியாது. இயந்திர சக்தி என்பதுதான் என்ன? கம்பியின் மூலம் மின்சார சக்தியை அனுப்பக்கூடிய ஒருவனைப்பெரியவனென்றும், மேதாவி என்றும் ஏன் கருத வேண்டும்? அதைவிடக் கோடானு கோடி மடங்கு பெரிய காரியங்களை இயற்கை ஒவ்வொரு கணமும்

செய்யவில்லையா? அந்த இயற்கையை என் வணங்கிப் போற்றுதல் கூடாது? இவ்வுலகம் முழுவதிலும் உன் ஆணை செல்லலாம்; இந்த புவனத்திலுள்ள ஒவ்வோர் அணுவையும் நீ வயப்படுத்தி விடலாம்; ஆயினும் பயன் என்ன? உன்னை நீ வெற்றி கொண்டிருந்தாலன்றி, உனக்குள் நீ இன்பமுறும் சக்தி பெற்றிருந்தாலன்றி, உண்மை மகிழ்ச்சி யடைய முடியாது.

***

நமது துன்பங்களை யெல்லாம் என்றென்றைக்கும் அழித்துவிட வல்லது ஆத்ம ஞானம் ஒன்றேயாம். மற்ற ஞானங்கள் எல்லாம் சிறிது காலத்திற்கு நமது தேவைகளைப் பூர்த்தி செய்யலாம்; ஆனால் ஆத்ம ஞானம் உண்டாகும்போதுதான் பூரண உள்ள நிறைவு ஏற்பட்டுத் தேவை உணர்வே அடியோடு நசித்து விடுகிறது.

***

உடல் வலிமையினால் மிகப் பெருங்காரியங்கள் செய்யப்படுகின்றன. மூளைத்திறமையினால், பௌதிக சாஸ்திரங்களின் துணைபெற்ற இயந்திர சாதனங்களைக் கொண்டு இன்னும் அதிஆச்சரியமான வினைகள் நிகழ்த்தப்படுகின்றன. ஆனால் இவை யெல்லாம், ஆத்ம சக்தியின் மூலம் இவ்வுலகில் செய்யக்கூடிய மகத்தான காரியங்களுக்கு முன்னால் அற்பமானவையாகும்.

***

மேனாட்டு நாகரிகத்தின் பகட்டையும், பளபளப்பையும் நான் அறிவேன். அதினின்றும் வெளித்தோன்றும் ஆச்சரியமான புற சக்திகளையும் அறிவேன். ஆயினும் இந்த மேடைமீது நின்று "இவை யெல்லாம் வீண்; வெறும் பிரமை; உரு வெளித்

தோற்றம் ; ஆண்டவன் ஒருவனே மெய்ப்பொருள்" என்று நான் கூறுகிறேன்.

***

மேனாட்டாராகிய நீங்கள் உங்களுக்குரிய துறைகளில், அதாவது இராணுவம், அரசியல் முதலியவற்றில் காரியவாதிகளா யிருக்கிறீர்கள். இத்துறைகளில் கீழ்நாட்டான் செயல்திறன் அற்றவனா யிருக்கலாம். ஆனால் அவன் தனக்குரிய சமயத்துறையில் சிறந்த காரிய வாதியாய் விளங்குகிறான்.

***

"ஹுர்ரா" என்ற கோஷத்துடன் பீரங்கியின் வாயில் குதிக்க உங்களுக்குத் தைரியமுண்டு. தேசபக்தி யென்னும் பெயரால் நீங்கள் தீரச்செயல்கள் புரிவீர்கள். தேசத்திற்காக உயிர் கொடுக்கவும் சித்தமா யிருப்பீர்கள். இதுபோன்றே, கீழ்நாட்டார் கடவுளின் நாமத்தைச் சொல்லிக்கொண்டு தீரச்செயல்கள் புரிவார்கள்.

***

இக வாழ்க்கையில் சுகாநுபவம் மேனாட்டு இலட்சியமாயிருப்பதுபோல் உயரிய ஆத்மசாதனம் எங்கள் இலட்சியமா யிருக்கின்றது. "சமயம் என்பது வெறும் வாய்ப் பேச்சன்று ; இவ்வுலகவாழ்க்கையில் முற்றும் அனுஷ்டித்தற்குரியது" என்று நிரூபித்தல் கீழ்நாட்டின் இலட்சியம்.

***

ஒரு மனிதன் எவ்வளவு பொருள் படைத்தல் கூடும் என்னும் பிரச்னைக்கு முடிவுகாண மேனாட்டில் முயன்று வருகிறார்கள். இங்கு நாம் எவ்வளவு சொற்

பத்தில் ஒருவன் வாழ்க்கை நடத்தக்கூடும் என்று கண்டுபிடிக்க முயன்று வருகிறோம்.

***

ஒரு நாட்டார் நிலை பெற்று வாழவும், மற்றவர்கள் அழிந்து படவும் காரணமா யிருப்ப தெது? வாழ்க்கைப் போராட்டத்தில் எது மிஞ்சி நிற்கும்? அன்பா, பகைமையா? துறவொழுக்கமா, சுகாநுபவமா? சடமா, ஆன்மாவா? எது நிலைக்கும்?....துறவு, தியாகம், அஞ்சாமை, அன்பு இவையே நிலைக்குமென்பது நமது முடிவு.

***

ஆசியாவின் போதனை சமய போதனையாகும். ஐரோப்பாவின் படிப்பினை அரசியல் படிப்பினையாகும்.

***

அரசியலிலும், பௌதிக சாஸ்திர ஆராய்ச்சியிலும் மேனாடு தீரர்களுக்குப் பிறப்பளித்திருக்கிறது. கீழ் நாடு பாரமார்த்திகத்துறையில் பெரியோர்களைத் தந்திருக்கிறது.

***

கீழ் நாட்டான் இயந்திரம் செய்யக் கற்றுக்கொள்ள விரும்பினால் அவன் மேனாட்டானின் காலடியில் அமர்ந்து கற்றுக்கொள்ளல் தகுதியுடைத்தாகும். அவ்வாறே மேனாட்டான் ஆத்மாவைப் பற்றியும், கடவுளைப் பற்றியும், சிருஷ்டி இரகசியங்களைப் பற்றியும் அறிந்து கொள்ள விரும்பினால் அவன் கீழ் நாட்டான் அடியின் கீழ் உட்கார்ந்து தெரிந்துகொள்ளல் வேண்டும்.

நமது சமயத்தின் மகத்தான உண்மைகளை உலகுக்கெல்லாம் எடுத்துரையுங்கள். உலகம் அவற்றிற்காகக் காத்துக் கொண்டிருக்கிறது.

***

சமயப் பிரசாரம் செய்ய நீங்கள் வெளியே செல்லவேண்டும். உலகிலுள்ள ஒவ்வொரு தேசத்தார்க்கும், ஒவ்வொரு ஜாதியார்க்கும் உங்கள் சமய உண்மைகளை எடுத்துரைக்க வேண்டும். இதுவே முதலில் செய்ய வேண்டிய வேலை.

***

நூற்றுக் கணக்கான வருஷங்களாய் மனிதனுடைய சிறுமையைப் பற்றிய கொள்கைகளையே ஜனங்கள் கேட்டிருக்கிறார்கள். 'நீங்கள் வெறும் பூஜ்யங்கள்' என்று அவர்களுக்குச் சொல்லப்பட்டு வந்திருக்கிறது....இப்போது அவர்கள் ஆத்மாவைப் பற்றி அறிந்து கொள்ளட்டும். தாழ்ந்தவனிலும் தாழ்ந்த மனிதனிடத்தும் கூட ஆத்மா உண்டென்றும், அதற்குப் பிறப் பிறப்பில்லை யென்றும் அவர்களுக்கு எடுத்துச் சொல்லுங்கள்.

***

இந்தியாவின் ஆத்ம வித்தையினால் உலகை வெற்றிகொள்ள வேண்டும். நமது தேசீய வாழ்வு அவ்வெற்றியையே பொறுத்திருக்கிறது. அப்போதுதான் நமது தேசீய வாழ்வு புத்துயிரும் புதிய பலமும் பெற்றுச் சிறந்து விளங்கும்.

***

நாம் வெளிப்புறப்பட வேண்டும். நமது பாரமார்த்திக ஞானத்தினாலும், ஆத்ம வித்தையினாலும்

உலகை ஜெயிக்கவேண்டும்; அல்லது இறந்துபட வேண்டும். வேறு வழி இல்லை.

***

சமயம், பாரமார்த்திகம் இவற்றின் வெற்றியே பாரத நாட்டின் வெற்றியென்பதாக இந்தியாவின் மகிமை வாய்ந்த சக்கரவர்த்தியான அசோகவர்த்தனர் கூறியிருக்கிறார். உலகம் மற்றொரு முறையும் இந்தியாவினால் ஜெயிக்கப்பட வேண்டும். இதுவே என் வாழ்க்கையின் கனவாகும். உங்களில் ஒவ்வொருவரும் இக்கனவைக் கண்டு வரவேண்டுமென்று நான் விரும்புகிறேன். அக்கனவு மெய்யாகும் வரையில் நீங்கள் சோர்வடைந்து நிற்கக் கூடாது....பாரத நாடு இப்பூவுலக முழுவதையும் ஜெயித்தல் என்பதே நம்முன்னுள்ள மகத்தான இலட்சியமாகும். அதற்குக் குறைவான இலட்சியம் நமக்கு வேண்டாம். அந்த இலட்சியத்திற்கு நாம் ஒவ்வொருவரும் சித்தமாக வேண்டும். அதற்காக அரும்பாடு பட வேண்டும். அன்னிய நாட்டார் வந்து இந்நாடு முழுவதையும் தங்களுடைய சைன்ய மய மாக்கட்டும். அதைப் பொருட்படுத்த வேண்டாம். பாரதர்களே! எழுந்திருங்கள். உங்கள் பாரமார்த்திக ஆயுதத்தினால் உலகை வெற்றி கொள்ளுங்கள்.

***

உலகாயத நாகரிகத்தையும் அதனுடைய துன்பங்களையும் உலகாயதத்தினாலேயே ஒருநாளும் ஜெயிக்க முடியாது. சைன்யங்கள் சைன்யங்களை ஜெயிக்க முயலும்போது அவை பல்கிப் பெருகி மக்களை மாக்களாக்குகின்றனவே யல்லாது வேறில்லை.

மேனாட்டைப் பாரமார்த்திகத்தினாலேயே வெற்றி கொள்ள வேண்டும்.

***

நீங்கள் பிறருக்கு அளிக்கக் கூடிய விலை மதிக்க வொண்ணாத பெருஞ் செல்வம் உங்களிடம் இருக்கிறது. அதுதான் உங்கள் சமயம்; உங்கள் ஆத்ம வித்தை. மேனாட்டாருக்கு அச்செல்வத்தை அள்ளி வழங்குங்கள்.



Sadhu Press, Madras.

# ஸ்ரீ ராமகிருஷ்ண வசனாமிருதம்

## முதல் பாகம்

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது அந்தரங்க சிஷ்யர்கள்—ஞானிகள், பக்தர்கள், கர்மயோகிகள்—துறவிகள், பிரம்மசாரிகள், கிருகஸ்தர்கள் ஆகிய அனைவருடனும் புரிந்த சம்பாஷணைகள் அடங்கியது. உயர்ந்த வேதாந்த உண்மைகள் மிக சுலபமான உபமானங்களால் விளக்கப்பட்டிருக்கும் இந்நூல் வெவ்வேறு நிலைகளிலுள்ள எல்லா சாதகர்களுக்கும் இன்னும் அதிகமான பக்தி ஞான வைராக்கியங்களைப் புகட்டி முன்னேற்ற மடையும்படி செய்யவல்லது.

விலை ரூ. 1 8 0

# ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்ஸர் அருளிய 1003 உபதேச மொழிகள்

[இரண்டாம் பதிப்பு]

சாதாரண பயிண்டு ரூ. 1 6 0
காலிகோ பயிண்டு ரூ. 1 12 0

---

# ஸ்ரீமத் சுவாமி விவேகாநந்தர் அருளியவை

| | அ. | பை. | | அ. | பை. |
|---|---|---|---|---|---|
| கர்ம யோகம் | 12 | 0 | எனது போர்முறை | 3 | 0 |
| பக்தியோகம் | 10 | 0 | பவா ஹாரி பாபா | 3 | 0 |
| கடிதங்கள் | 8 | 0 | விதிவசம் | 0 | 6 |
| சிகாகோ பிரசங்கம் | 5 | 0 | | | |

---

# குருதேவர் வாக்கியம்

பாக்கெட் அளவில் புத்தக ரூபமாய் உள்ளது.

சாதாரண பயிண்டு அணா 5, காலிகோ பயிண்டு அணா 8

ஸ்ரீ ராமகிருஷ்ணர், ஸ்ரீ சாரதாமணி தேவியார், ஸ்வாமி விவேகாநந்தர் இவர்களது புகைப்படங்களும், அச்சுப் படங்களும் வெவ்வேறு அளவில் கிடைக்கும்.